உ 8-2

திருச்சிற்றம்பலம்.

விருத்தகிரியில்-பெரியநாயகியார்
வரப்பிரசாதியாயெழுந்தருளியிருந்த

# குமாரதேவர்

திருவாய்மலர்ந்தருளிய

## சாத்திரக்கோவை.

இஃது
திருவொற்றியூர்

**சொரூபாநந்தப்ரதேசி**

யவர்களால்
பார்வையிட்டு

**ம-சபாபதிமுதலியாரால்**

சதுரங்கபட்டணம்
அண்ணாமலைமுதலியாரவர்களது
சரஸ்வதீவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.
விரோதிகிருது - வூ
கார்த்திகை-மீ



உ

# குமாரதேவர்

## சரித்திரம்.

→»◉«←

ஸ்ரீ அகண்ட பரிபூரண சச்சிதானந்த ஸ்வரூபமே ஒருருவாகத் தரித்த குமாரதேவர் முற்பிறப்பில் பரமசிவத்தைநோக்கி-மல்லிகார்ச்சுனபர்வதத்தில்-நிஷ்காம தவஞ்செய்கையில்-அந்தச்சுவாமிகளோடுகூட-வேறொருவர்-அந்தப் பர்வதத்தின்கண்-தவஞ்செய்துக்கொண்ருந்தார் - அப்போது-பரமசிவம்-அவரது-தவத்திற்கிரங்கிப் பிரத்தியக்ஷமா யெழுந்தருளிவந்து, உனக்கு-என்னவரம் வேண்டுமென்று கேட்குமளவில்-அவரோ - ஒன்றைக்கருதி-ஒன்றைக் கேட்டமாத்திரத்தில்-பரமசிவம்-திருவுளத்தில் முனிவுகொண்டு-அடா நீ - ஜடாமூதியாகக்கடவதென்று சபிக்க-அதுகேட்டு-அவரும் திடுக்கிட்டெழுந்து நின்று-(சுவாமீ)இந்தச்சாபம்-அடிமைக்கு-எந்தக்காலத்தில் விமோசனமாகுமென்று கேட்க-அடா நீபோய்-விருத்தாசலத்தில்-மணிமுத்தாநதிக் கரையிலிருக்கின்ற அரசமரத்தின்மே லிருந்தாயாகில் ; இந்தப்பர்வதத்தில்-உன்னோடு-தவஞ்செய்துநிற்கின்ற-எமது அன்பனு

கிய-ஒருவன்-கன்னடதேயத்தில்-இராஜாங்கவவதா
ரஞ்செய்து-சிறிதுநாள் அரசுசெய்து - பிற்பாடு-
விரத்தியுண்டாய்-பேளாயூர்ச்சாந்தலிங்க சுவாமிக
ளிடத்தில்-அநுக்கிரகம்பெற்றுக்கொண்டு-ஷை-ஆ
சிரியருத்தாரப்படிவிருத்தசைலம்வந்து-நீ இருக்
கின்ற அரசமரத்தினிழலில் - உட்காருவான்; அப்
போது - நீ அவனைக் கண்டு - வணங்கிக்
கேட்டால்-அவன்-விமோசனஞ் செய்வானென்று
திருவாய்மலர்ந்தருளிய மாத்திரத்தில் - அந்தஜடா
முநியும்-(சுவாமீ)-அவருக்கு - முத்தித்திசை - எப்
போதென்றுகேட்க, அடா-இந்த-அன்பன்-இதற்
குமுன்னர் - ஐந்து சுத்ததேகமெடுத்து - நம்மை
நோக்கி - நிஷ்காம தவஞ்செய் திருக்கிறான் —
இஃது-ஆறாவது தேகம் இன்னம்-ஒருதேகத்தில் -
முத்தியைப் பெறுவானென்றருளிச்செய்ய, அதி
கேட்டு-ஜடா முநியும்-பாக்கியமென்று சுவாமியி
டத்தில் விடைபெற்றுக்கொண்டு-போய்,மேற்சொ
ல்லிய அரசமரத்தின்மே லிருந்து - எப்போது வி
மோசனகாலம் நேரிடுமென்று வழிபார்த்துக்கொ
ண்டிருந்தான்.

குமாரதேவரோ வென்றால்-பரம சிவத்தின்
திருவருட்படி-அருளே-திருவுருக்கொண்ட போதி
னும் ஆசிரியர் வேண்டியிருப்பதால் - கன்னடதே
யத்தி லவதரித்து-சிறிதுநாளரசுசெய்து-துறவுபூ



ண்டு ஒருநாள் தம்மிடத்திலுள்ளமந்திரி மார்களில்
முதல் மந்திரியானவரால்-தமது சரித்திரமுழுதும்
பேளாயூர்ச் சாந்தலிங்கச் சுவாமிகளுக்குத்- தெரி
வித்தபின்பு தாமேபோய்-ஷை-சுவாமிகளைக்கண்
டு-வணங்கிநிற்க.அது தெரிந்து சுவாமிகளும் இவ
ரது பரிபாகத்தை நோக்கும்பொருட்டுத்-தம்மிட
த்திருக்கும்-கைமேட்டுத் தம்பிரானைப் பார்த்து-
அப்பா-இவனைப்பார்த்தால்-அரசனைப்போ லிருக்
கின்றது-இவன்-இந்தவழிக்குப் பாத்திரவானல்ல
ஆதலால் இவனை அரசுக்கே போகும்படி சொல்
லென்றுசொல்ல, அதற்கு-அந்தத்தம்பிரானும் (சு
வாமீ) இந்த அரசனிடத்தில் அதிதீவரபக்குவ மு
டைய சற்சீஷிருக்குள்ள-பதினெண்குறியும் உண்
டாயிருக்கிறதே யென்று - சைகையாகச்சொல்ல-
சுவாமிகளும் முன்பே அறிந்திருப்பதால் இவனை
நமது எருதுக்குப் புல்லறுத்துப்போடச் சொல்
லென்று கட்டளையிட்டருள- அப்படியே தம்பிரா
ன்-அரிவாளும் புல்லுகட்டுங் கயிறுங் கொடுத்தனு
ப்ப.ஷை-குமாரதேவரும் அந்தத் திருப்பணியை
சிரசா வகித்துக்கொண்டு வயலுக்குப்போய்- பள்
ளர்கள் புல்லறுப்பதைப் பார்த்துத்-தாமும்-அறு
க்கநினைத்து-இடக்கையால்-புல்லைப் பற்றி-வலக்
கையிலுள்ள அரிவாளைப் புல்லின்மேற் பூட்டாமல்
இடக்கைமேற் பூட்டியிழுக்க-கையறுபட்ட மாத்

திரத்தில் மேற்படி வலக்கையைப்பார்த்துக்கோபித்தார்; இந்த அதிசயத்தை மேற்படி பிள்ளைகள் கண்டு-நீர் ஆரென்றுகேட்க-நான் இன்னசுவாமிகளுடைய வாகனத்திற்குப் புல்லறுப்பவனென்றுசொல்ல-அதுகேட்டு-அவர்கள்-ஆச்சரியமடைந்து-இவர் அரசனைப்போ லிருக்கிறதென்றெண்ணி, தாங்களே புல்லறுத்து-கட்டுகட்டி அவர் திருமுடிமேல்வைக்க-அந்தச் சுமைபொறாமல் திருமுடிசாய்ந்துபோவதைக்கண்டு அப்பள்ளர்களே-அந்தப் புற்சுமையை யெடுத்துவந்து மேற்படி மடாலயத்தி வெளியில் வைத்துப்போனார்கள்.

இந்தப்படி இரண்டுநாள்சென்றபின்பு - மூன்றாவதுநாள்-மேற்படி-புற்சுமையை எடுத்துவந்தபள்ளன்-இவர்சேதிமுழுதும் கையேட்டுத் தம்பிரானுக்குத் தெரிவிக்க-அவரும்-இவர் கையறுப்புண்டசேதியை சுவாமிகளுக்குக் குறிப்பாகத்தெரிவிக்க-அதுதெரிந்து-சுவாமிகளும், குமார தேவரைப்பார்த்து - முறிவுகொள்ள - அவரும்பயந்து பேசாமலிருந்துவிட்டார்.

பிற்பாடு-அன்றிராத்திரி சுவாமிகள் கையேட்டுத் தம்பிரானையழைத்து-அப்பா-எங்கிலிருவருக்கும் வெவ்வேறே கட்டமுதுகட்டி ஒரு தண்டத்தின் மாட்டி, அரசனிடத்திற் கொடுத்து நம்மோடு அனுப்பிவையென்று கட்டளையிட்டருள-அவ



ரும் அப்படியேசெய்து அனுப்பிவைக்க- சுவாமிகள்முன்னும் குமாரதேவர் பின்னுமாய்ப்போகையில்-சிலதூரம்போய்- சுவாமிகள், இவரைத் திரும்பிப்பார்த்து, என்ன தாமசமென்றுகேட்ட-அது கேட்டு இவரும்பயந்து (சுவாமீ) ஒருபுறம் அச்சலிங்கம் மற்றொருபுறம் கனத்த பிழுக்கின்றதே யென்றுசொல்ல-அந்தக்குறிப்பறிந்து சுவாமிகள் தமக்குத்தாமே மகிழ்ச்சியடைந்து-அவிடத்துள்ள-ஒரு குளக்கரைமே லிறங்கினார்கள்-அவ்விடத்திலிருவரும் ஒன்றாக வுட்கார்ந்து இரண்டன்னத்தையும் ஒன்றாய்ச்சேர்த்து - குமாரதேவர் சுவாமிகளுக்குப்பரிமாற-ஷெ-சுவாமிகள் நைவேத்தியங் கொண்டபின்பு சேடமானமகாப் பிரசாதத்தைத் தாமும் உட்கொண்டு சிறிதுநேரம் அவ்விடத்தில் இருவரும்-வசனித்துக் கொண்டிருந்து-பிற்பாடு- மடாலயத்திற்கு வந்துசேர்ந்து சிலநாள்கழித்து மேற்படிசுவாமிக ளிடத்தில்.

அநுக்கிரகம் பெற்றுக்கொண்டு-சாதனை செய்து முதிர்ந்தகாலத்தில் ஒருநாள் சாந்தலிங்கசுவாமிகள்-இவரை மகாராஜாவென்று பேரிட்டழைத்து அப்பா-நீ விருத்தாசலத்துக்குப்போகவேண்டுமென்று கட்டளையிட்டருள, அங்ஙனே நல்லதென்றுவிடைபெற்றுக்கொண்டு விருத்தாசலத்தைநோக்கிவருகிறவழியில்-சின்னசேலத்திற்குச் சேர்ப்புற

மான காட்டில் இவர்நிமித்தம் அன்புகூர்ந்து-பழ
மலைநாதரே-ஒருபிராமண ரூபமாயெழுந்தருளி வ
ந்து-தண்ணீர்ப்பந்தல் வைத்துக்கொண்டிருந்து-
இவரைக்கண்டு அப்பா-நீ ஆயாசமாய்ப்போகிறப
டியால் நால்வகை ஜலமு மிருக்கின்றது - உனக்கு
வேண்டியமட்டும் சாப்பிட்டு விடாய் தீர்க்கலாம்
என்றுபசரித்துத்தண்ணீர்க்கொடுக்க இவர் அதை
ச்சாப்பிட்டு-தாகநிவர்த்தி பண்ணிக்கொண்டு வி
ருத்தசைலம்வந்துசேர்ந்து மணிமுத்தாநதிக்கரை
யிலிருக்கின்ற அரசமரத்தினிழலில் ஆயாசமாய்ச்
சயனித்துக்கொண்டு பிரமாநந்த நித்திரையிலிரு
ந்தருளினார்.

அதுசேதிபெரியநாயகியாரறிந்து தனதபிடே
கத்திற்கு சுவர்ண பாத்திரத்தில் வைத்திருந்த பசுவி
ன்பாலை ஏந்திக்கொண்டு ஓர்பிராமண ஸ்திரியை
ப்போல இவரிடத்தில்வந்து தலைமாட்டி லுட்கார்ந்
து தனது திருமடியின்மேல் இவரது திருமுடியை
த் தூக்கிவைத்து அந்தப்பாலைப் புகட்டின பின்பு
இவர் ஆயாசந் தீர்ந்து கண்ணைவிழித்து நீ ஆரம்
மாவென்று கேட்க-அப்பா குமாரதேவா-நான்தா
ன் பெரியநாயகி-நீயெப்போதும் என்னிடத்தில்
தானே சுகமாயிருவென்று திருவாய் மலர்ந்தருளி
ச் உடனே மறைந்துவிட்டாள்-இதை மேற்படி ஜடா
முநிகண்டு யாத்திரைவிட்டுக் கீழேயிறங்கி பிராம



ணவுருவமாய் வணங்கிநிற்க-இவர் அந்த ஜடாமுநி
யைப்பார்த்து நீயாரென்றுகேட்க-நான் ஜடாமு
நியென்றுசொல்ல-நீஇவடத்திற்கு வந்தகாரியமெ
ன்னவென்று கேட்டமாத்திரத்தில் ஜடாமுநிதன
து சரித்திரமுழுதும் விவரமாகச்சொல்ல-அதுகே
ட்டு குமாரதேவரும்-சந்தோஷமாய் ஜடாமுநியி
ன் சாபநிவர்த்திபண்ணி சிறிதுநாள் அவ்விடத்தில்தா
னே கரபாத்திரம்பண்ணிக்கொண் டிருக்குங்கால
த்தில் அவிடத்திலுள்ள ஒருகுடும்பியானவன் இவ
ரைமகானென்றறிந்து நாள்தோறும் உண்மையா
ய்த் தரிசனம்பண்ணிக்கொண்டேவர - அவனுக்கு
நாளுக்குநாள் சகலசம்பத்தும் அபிவிர்த்தி யடை
ந்து வருகையில் ஒருநாள் அவன், குமாரதேவரைக்
கண்டுவணங்கி (சுவாமீ) அடியேனுக்கு ஏதேனும்
ஓர் திருப்பணி கட்டளையிட்டருள வேண்டுமென்
று வருந்திக்கேட்க-குமாரதேவரும் அப்பா-அப்ப
டி உனக்கிஷ்டமிருந்தால் பெரிய நாயகியார் ச
ந்நிதானத்திற் கெதிராக ஒருமண்டபங் கட்டிவை
யென்று கட்டளையிட்டருள: அவனும் அப்படியே
மகா பாக்கியமென்று மண்டபங்கட்ட எத்தனித்
துக்கட்டும்போது-உத்திரக்கல் மேலேறாமல் வரு
த்தமடைந்து-குமாரதேவருக்குத் தெரிவிக்க கு
மாரதேவரும் விபூதியைக்கொடுத்து இதை அந்த
க்கல்லின்மேரில்போட்டுத் தூக்கென் றுத்தரவுசெ

யிப அப்படியேசெய்து முடித்தபின்பு அந்தக்குடும்பியும் சந்தோஷித்தனாய்க்குமாரதேவரைவணங்கிநின்று (சுவாமீ) தேவருடைய பிரபாவத்தை - யின்னதென்றளவிட்டுச் சொல்ல ஆராலாகுமென்று நாநாவிதமாகத் தோத்திரஞ்செய்ய குமாரதேவரும் அவனை அழைத்துக்கொண்டுபோய் கோபுரவாயிலிற் செய்துவைத்திருக்கும் இரண்டு துவாரபாலகருடைய முதுகும் உடைபட் டிருப்பதைக் காண்பித்து-இவர்களுக்குத் தவனகஞ்சிகாய்ச்சிநைவேத்தியம்பண்ணென்று கட்டளையிட்டருள. அவனும் மகாபாக்கியமென்று அப்படியே செய்வித்து ஒருசகிருத்தியனானான்.

பிறகு ஒருநாள் குமாரதேவரும் ஓர்குடும்பி வீட்டுவாசலில் கரபாத்திரத்திற்குச்சென்று கையேந்த அவர்கள் இவரது மகிமையை யறியாதவர்களாய் தங்கள் வீட்டில் சமைத்துவைத்திருந்தமச்சத்தை அன்னத்தோடுகலந்து இவர்கையிற் பரிமாற அதுதெரிந்து குமாரதேவரும் அங்ஙனே குளக்கரைக்குச்செல்ல அந்தமச்சம் உயிரோடு குளத்திற் குதித்துப்போய் விட்டது.

இப்படியிருக்க ஒருகுஷ்டரோகியானவன் தனது தேகவருத்தம் நீங்கவேண்டுமென்று நாடோறும் இடைவிடாமல் குமாரதேவரைக் கண்டு தரிசனம்பண்ணிக்கொண்டேவருகையில் ஒருநாள் அ



திகவாதனையினாற்சகிக்கப்படாதவனாய்க்குமாரதேவரது திருவடியில்வந்துவிழுந்து கோவென்று முறையிட்டுச்சொல்லக்குமாரதேவரும்-அப்பா நாம் வயித்தியநல்லவேயென்று சொல்ல அவனும் (சுவாமி) தேவரது திருக்கையினால் விபூதிகொடுத்தால் எனது ரோகம் நிவர்த்தியாகுமென் றிரங்கிக்கேட்க குமாரதேவருந் திருவுளமிரங்கி விபூதியையள்ளி அவனது இடக்கையில்வைத்து வலக்கையால்மூடிக் கொள்ளச்சொல்லி பழமலையார் சந்நிதானத்திலுள் ஒருமாடத்திலிருக்கும் விக்கினேஸ்வரரைக் குறியாகக்காண்பித்து நீ அந்த விக்கினேஸ்வரர் முன்னேபோய் இரண்டுகண்களையுமூடிக்கொண்டுநின்று அங்கே நடக்கின்ற அதிசயத்தை நமக்குவந்து சொல்லென்று கட்டளையிட்டருள, அவனும் அப்படியேபோய் நின்றமாத்திரத்தில், அவனுக்குச் சுழுத்திப்போற்றோன்ற அத்தருணத்தில் அந்த விநாயகக்கடவுள் தமது துதிக்கையை நீட்டி இவனது இடக்கையிலிருந்த விபூதியைத்தொட்டதுபோலக் கண்டு விழித்துச் சுவாமிகளிடத்திற்குவந்து விண்ணப்பஞ் செய்தமாத்திரத்தில் குமாரதேவரும் ஆனந்தமாய் அந்த விபூதியைத்தொட்டுத் தரித்துக் கொண்டு அவனையும் தரித்துக்கொள்ளும்படி உத்தரவுசெய்ய அவன் அப்படியேதரித்து வருங்காலையில் அவனது குஷ்டரோகம் நிவர்த்தியாகிச் சௌகியமடைந்தான்.

இப்படியிருக்கின்ற நாளையில் ஒருநாள் குமா
ரதேவரும் திருவாரூர் மகோத்சவத்திற்குப் போ
யிருந்தபோது ரதோச்சவத்தினன்றைக்கு தியாக
ராயர் ரதமேறி மாடவீதிவருகையில் அந்தரதத்தி
ற்கு நேரே குமாரதேவர் நின்று பார்த்துக்கொண்
டிருப்பதை இரண்டுசைவர்கள் கண்டு ஒருவர்க்கொ
ருவர் விகடமாய் வீரசைவமருளைப் பார்த்தீர்க
ளோவென்றுபேசிக்கொள்ள அந்தவிகடவார்த்தை
யைக் குமாரதேவர்கேட்டு ரதத்தில்வருந் தியாக
ராயரைப்பார்த்து (தியாகராயா) வீரசைவம் மரு
ளானால் ரதம்நடக்க அருளானால் ரதம்நிற்கவென்
று திருவாய்மலர்ந்தருளி சிலதூரம்போய் ஒருமர
த்தினிழலில் உட்கார்ந்திருந்தார். அதுதெரிந்து அ
த்திருவிழாவின் தர்ப்மகர்த்தாவாகிய தஞ்சாவூர்
அரசன் ரதமானது நிலைவந்துசேர்ந்தபிறகு போ
ஜனஞ்செய்கிறதென்னும் நிச்சயமுடையவனாதலா
ல் என்னசெய்வதென்றச்சமுற்று இவிடத்தில்நடந்
த ரகசியந்தெரியாதபடியினால் சாயங்காலபரியந்
தமும் அந்தரதம் நடக்கும்படி அநேக பிரயெத்
தனங்கள் செய்வித்தும் அஃது சற்றுகிலும் அசை
யாதிருக்க பிறகு யேற்படி அரசன் இவிடத்தில்
நடந்த ரகசியத்தைக் கேள்விபட்டு குமாரதே
வரிடத்திற்குவந்து அவ்வமயம் வணங்கி விண்ண
ப்பஞ்செய்ய குமாரதேவரும் அரசனைப்பார்த்



து இந்த மருளனிடத்தில் உங்களுக்கு என்ன அலு
வல் போங்களென்றுசொல்ல அரசனும் (சுவாமீ)
இந்தப்பிழையை மன்னித்து ரதத்தை நடப்பித்
தருளவேண்டுமென்று வெகுவாகத்தோத்திரஞ்செ
ய்ய அதற்கு குமாரதேவரும் திருவுளமிரங்கி அ
ந்தராஜனுடனுஞ் சேனைகளுடனும் எழுந்தருளிவ
ந்து ரதத்தின்முன்னே நின்று தியாகராயரைப்பா
ர்த்து (தியாகராயா) வீரசைவம் அருளானால் ரத
ம் நடக்கமருளானால் ரதம் நிற்கவென்று திருவாய்
மலர்ந்தருளினமாத்திரத்தில் ரதம் ஜரோலென்றுநட
ந்து நிலையிற்போய்ச்சேர்ந்தது.

இப்பால் குமாரதேவர் மறுபடியும் விருத்த
சைலம்வந்து அவ்வரசமரத்தின்கீழ் வாசம்பண்
ணிக்கொண்டிருக்குங்காலையில் பிறதேசத்திலுள்ள
ஓர் மாந்திரீகனொருவன் விருத்த சைலத்திலுள்ள ப
த்திரகாளியைத் தன்வசமாக்கிக்கொள்ள எண்
ணி தனதுநாட்டைவிட்டு மணிமுத்தா நதியின் வட
திசையாக வருகையில் அதை பத்திரகாளியறிந்து
அச்சமுற்றவளாய் ஒரு ஸ்திரீயைப்போல குமார
தேவரிடத்திற்குவந்து அவரைப் பிரதக்ஷிண நமஸ்
காரம்பண்ணி அவருக்கெதிரே நிற்க அதுகண்டு குமா
ரதேவரும் நீயாரென்றுவினவ (சுவாமீ) நான்பத்
திரகாளி என்னையிந்தப்பிரகாரஞ்செய்யும்படி ஒரு
சண்டாளன் வருகிறான் அதனால் பயந்துவந்தேனெ

ன்று விண்ணப்பஞ்செய்ய அதற்கு குமாரதேவரு
ம் என்னால்உனக்கு ஆகவேண்டிய தென்னென்று
வினவ பத்திரகாளியும் சுவாமீ தேவரது திருவடி
யை அடியாள்சிரசின்மேல்வைத்தால் எனது ஆபத்
தீருமென்று விண்ணப்பஞ் செய்ய குமார
தேவரும் திருவுளமிரங்கி அங்ஙனே நல்லதென்று
பத்திரகாளிசந்நிதிக்கெழுந்தருளிவந்து அந்தவிக்
கிரகத்தின்முடிமேல் தமது திருவடியைத் தூக்கி
வைத்தமாத்திரத்தில் அந்தமாந்திரீகனுடைய இரண்
டுகண்களும் அவன்மனம்போலவே இருளடைந்த
து அதுதெரிந்து அந்தமாந்திரீகனும்பயங்கொண்டு
இந்தஸ்தலத்தில் பெரியவாள் வாசஞ்செய்கிறார்
போலிருக்கிறதென்றெண்ணி அவிடத்தில்விசாரிக்
க குமாரதேவரிருக்கிறதைக் கேள்விப்பட்டு அவ
ரிருக்குமிடந்தேடிவந்து அவரைக்கண்டு வணங்கி
நிற்க குமாரதேவரும் அவனைப்பார்த்து நீயாரெ
ன்று வினவசுவாமீநான்மாந்திரீகன்நான் இவிடத்தி
ற்கு இந்த உத்தேசமாய்வந்த இடத்தில் எனக்கு
இவ்வகையான ஆபத்துநேரிட்டது இதை தேவரே
தீர்த்தருளவேண்டுமென்று வெகுவாகத் தோத்திர
ஞ்செய்துநிற்க குமாரதேவரும் சற்றேதிருவுள
மிரங்கி அடா உன்சரீரமுள்ளவரையிலும் இந்தமாந்
திரீகத்தைவிட்டிருப்பாயாகில் உனக்கு ஒருகண்மா
த்திரந்தெரியுமென்று ஆக்கியாபித்தருளியமாத்தி



ரத்தில் அவனும் அப்படியே நல்லதென்று குமா
ரதேவரது திருவடியைத்தொட்டுச் சொன்னவளவி
ல் ஒருகண்தெரிந்து தன்னுடைய தேசத்துக்குப்
போய்விட்டான்.

இப்பால் ஒருகுடும்பியானவன் புத்திராபேக்ஷை
யினால் ஸதிரீயுந்தானும் நெடுநாளாய் விசனப்பட்
டுக்கொண்டு குமாரதேவரைக் கண்டு நாள்தோ
றுந் தரிசனம்பண்ணிவருகையில ஒருநாள் குமார
தேவர் திருவுளமிரங்கி ஷை குடும்பிக்குவிபூதியளி
க்க அவ்விபூதிமுன்னிலையால் அவர்களுக்கு இரண்டு
ஆண்பிள்ளைகள்பிறந்து அதுகள் வளர்ந்து ஐந்து
வயதாகி பள்ளிக்கூடத்தில்வைத்து வித்தியாப்பியா
சஞ்செய்வித்தபிறகு அந்தப்பிள்ளைகளுக்கு இலக்
கணப்பியாசஞ்செய்விக்கவேண்டி இலக்கணவித்து
வானாகிய சிதம்பரபிள்ளையென்பவரை மதுரையிலி
ருந்துவரவழைத்து ஷை இரண்டுபிள்ளைகளுக்கும்இ
லக்கணப்பியாசஞ்செய்வித்துவருங்காலத்தில் ஒரு
நாள் குமாரதேவர்குருபூசைநிமித்தம் அந்தக்
குடும்பிவீட்டுக்குவருகையில் மேற்படி சிதம்பர
பிள்ளையென்னும் உபாத்தியாயர் இவரிடத்தில்மதி
ப்பற்று இறுமாந்திருப்பதைக்கண்டு அவரைத்தடுத்
தாட்கொள்ளத்திருவுளங்கொண்டு அவரை நோக்கி
ஓர்வாக்கியத்தைகூறி அதற்குப்பயன்வினவ அவரு
க்கென்ன வித்வசாமர்த்தியமிருந்தபோதிலும் இந்

தச்சந்நிதானத்தில் நாவெழாமையால் பயன்கூறு
து மயங்கிநின்று சற்றேதெளிவுண்டாகி குமாரதே
வரது திருவடியில்விழுந்துவணங்கி சுவாமீ அடி
மையை ரக்ஷித்தருளவேண்டுமென்று விண்ணப்ப
ஞ்செய்து அதுமுதல் துறவுபூண்டு மேற்படி குமா
ரதேவரது பின்னாகவே சாயைபோற்றொடர்ந்து
தானுஞ்சாபாத்திரம்பண்ணிக்கொண்டிருந்தார் அ
வரது ஆராமையையுந் மெய்யன்பையும் குமார
தேவரறிந்து அவரைத்தமது ஆசிரியரிருக்கும் தி
ருப்பேரூருக்குக்கூட்டிக்கொண்டுநடந்துமடா
லயத்திற்குச்சமீபமாகப்போகையில் விடியற்கால
யாகையினால் எழுந்திருந்து வெளியேவந்துநிற்கிறத
ம்பிரான்களைக்கண்டு சுவாமிகளிருக்குஞ் சமைய
மெப்படியென்றுவினவ சுவாமிகள்பரநிட்டையி
லெழுந்தருளியிருக்கின்றதெனக்கூற ஆனால்நாம்
பணிசெய்வோமென்றுநினைத்து குமாரதேவர்சா
ணச்சட்டியெடுத்துக்கொண்டுதிருமெழுகிட சிதம்
பரசுவாமிகளும் திருவலகெடுத்துக்கொண்டு திரு
வலகிட்டார் இத்திருப்பணி முடித்தபின்பு சுவா
மிகள் திருக்கண்விழித்தருளிய சேதிதெரிந்துஇவ்
விருவர்களும் மடாலயத்துட்சென்று சுவாமிகளை
க்கண்டு வணங்கிநிற்க சுவாமிகளும்குமாரதேவரை
ப்பார்த்து அப்பா உன்னை யடுத்து நிற்கின்றவன்
யாரென்றுவினவ தென்னாட்டுச்சைவனென்றுசொ



ல்ல இவனை ஏனழைத்துவந்தாயென்று கேட்க அ
தற்குக்குமாரதேவர் மௌனமாயிருந்துவிட்டார்
இப்படி இரண்டுதினஞ்சென்றபின்புசிதம்பரசுவா
மிகளது நடையைக் கையேட்டுத்தம்பிரானறிந்து
சுவாமிகளை வணங்கிநின்று சுவாமி இந்தச்சைவன்
மிகுந்தவல்லவனாயிருக்கிறபடியால் இவனைத்திருவ
டிக்கு ஆளாக்கிக்கொள்ள வேண்டுமென்று விண்
ணப்பஞ்செய்ய அதற்குச் சுவாமிகளும் மேற்படி
தம்பிரானைப்பார்த்து அப்பா நமக்கிருக்கிறசந்த
திபோதும் நமது சந்ததிக்குச்சந்ததி நெடுநாளா
யில்லாதிருந்து இப்போது கிடைத்தபடியால் அப்
படியேசெய்விக்கவேண்டுமென்று கட்டளையிட அ
தற்குத்தம்பிரான் மௌனமாயிருந்துவிட்டார்இப்
படி இரண்டுநாள்கழிந்தபின்பு மூன்றாவது நாள்
சாந்தலிங்கசுவாமிகள் குமாரதேவரையழைத்து நீ
ஊருக்குப்போவென்று சொல்ல குமாரதேவரும்
இவன் இவிடத்தி லிருக்கட்டுமென்று விண்ணப்பஞ்
செய்ய சுவாமிகள் இவிடத்தில்வேண்டாம் நீயேய
ழைத்துக்கொண்டு போவென்று சொல்ல குமார
தேவரும் இவனைக்கொண்டுபோய் அடிமை என்ன
செய்கிறதென்று கேட்க சுலாமீகளும் குமார
தேவரைப்பார்த்து அப்பாநீஇவனைக்கொண்டுபோ
ய் பக்குவமறிந்து உனக்குச்சொன்னதை இவனு
க்குச்சொல்லிவையென்று கட்டளையிட குமாரதேவ

ரும் மகாப்பிரசாதமென்று விடைபெற்றுக்கொண்டு இருவரும்விருத்தாசலம்வந்துசேர்ந்து பிறகு சிதம்பரசுவாமிகளது பக்குவஞ் சோதித்து அநுக்கிரகஞ்செய்தருளினார். அவர்தான் திருப்போரூர்ச்சந்நிதானம்விளக்கிய சிதம்பரசுவாமிகள்.

இப்படி நடந்துவருங்காலத்தில் பெரியநாயகியாரும் குமாரதேவரால் சாஸ்திரஞ்செய்விக்கும்படி திருவுளங்கொண்டு குமாரதேவரதுபருகில் வந்து அப்பா குமாரதேவா நீசாஸ்திரஞ்சொல்லவேண்டுமென்று திருவாய்மலர்ந்தருள குமாரதேவரும் அம்மா அடிமையாற்சொல்லமுடியாதென்று விண்ணப்பஞ்செய்ய பெரியநாயகியாரும் ஆனால்நாமே உனது நாவில்நின்றுசொல்லிமுடிக்கிறோமென்று ஆக்கியாபித்து அங்ஙனே இந்த ஷோடச மகாசாஸ்திரங்களையுஞ் சொல்லிமுடித்தருளினார் இப்படி அனந்தமகத்துவங்களைச்செய்து அந்தத்தில் குமாரதேவரும் சொரூபசாக்ஷாத்காரபரிபூரணதிசையை யடையுஞ் சமயமறிந்து இரண்டாவதடிமையாகிய ஒட்டி சிதம்பரசுவாமிகள் குமாரதேவரைப்பார்த்து சுவாமி தேவரீர் பரிபூரணமானபின்பு அடியார்கள் தரிசனஞ்செய்து உய்யும்பொருட்டு ஓர்திருப்பணிகட்டளையிட்டருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய அதற்கு குமாரதேவர் நாமிறந்தும் நமதுபெயரிருக்க வேண்டு



மாவென்று அகண்டபரிபூரண சாக்ஷாத்கார சொரூபவியாபகத்திற் கலந்தருளினார்.

இப்பால் ஒட்டி சிதம்பரசுவாமிகளும் - ஸ்ரீ பெரியநாயகியாருத்தாரப்படி-குமாரதேவர் திருநாமத்தினால் கோயில்மடாலயமுதலாகியதுகளுஞ் செய்வித்து-பிறகு தாமும் பரிபூரண திசையையடைந்தருளினார்.

குமாரதேவர் சரித்திரம்

முற்றிற்று.

ஆதீனவரலாறு.

துறைமங்கலம்-சிவப்பிரகாசசுவாமிகள்.......... *
பேரையூர்-சாந்தலிங்கசுவாமிகள்.......... *
குமாரதேவர்-சிதம்பரசுவாமிகள்.......... *
ஒட்டி-சிதம்பரசுவாமிகள்.......... *
பழனிசுவாமிகள்.......... *
கூவாலத்துசுவாமிகள்.......... *
குழந்தைவேலுசுவாமிகள்.......... *
முத்தையசுவாமிகள்.......... *

குருபூசை.

குமாரதேவருக்குகுருபூசை-புரட்டாசிமாதம்-பூர்வபக்ஷத்சதுர்த்தசிதிதி.......... *
குழந்தைவேலுசுவாமிகள்குருபூசை-ஆடிமாதம் சுவினிநக்ஷத்திரம்.......... *

சாத்திரங்களினகராதி-முற்றுப்பெற்றது.



கணபதிதுணை.

# குமாரதேவர்

அருளிச்செய்த

சாத்திரங்கள்—பதினாறினுள்

முதலாவது

## மகாராஜாதுறவு.

காப்பு.

அமரர்கள்பரவுந்திருமுதகுன்றி...........*
லாழத்துப்பிள்ளையைச்சிகரிக்...........*
குமரசற்குருவையிமகிரிராஜ...........*
குமாரியாம்பெரியநாயகியை...........*
மூமலமுமொருங்கேயகற்றிடுமுக்கண்...........*
முதல்வனைச்சாந்தநாயகனை...........*
நமதெணப்படியேமுடிந்திடத்தின்மு...........*
நாடிநின்றிறைஞ்சிவாழ்த்திடுவாம்...........

(குருவணக்கம்.)

மறைமுடிவதனில்விளங்கிடுமொளியே ........*
மனிதனைப்போலவந்தெனது ........*
சிறைதவிர்த்தாண்டசிவப்பிரகாச ........*
தேசிகன்றன்னைமற்றவன்ற ........*
னறைமலரடியைப்போற்றிடுஞ்சாந்த ........*
நாயகன்றன்னைமற்றவன்ற ........*
னிறையருள்பெற்றபழனிமாமுனியை ........*
நெஞ்சினுளிருத்தியேபணிவாம் ........*

## பாயிரம்.

### ஆழத்துப்பிள்ளையார் துதி.

தொய்யின்மூலக்கோடிரண்டுசவான் ........*
றுதிக்கைமுன்றவிழிதரிசி ........*
றய்யனைசவமுதன்மதமுந் ........*
திலங்கவருமொண்பிடியுலக ........*
மூப்பவுதவுமொருகளிற்றை ........*
யுலவாவிருத்தசைலத்தில் ........*
வையம்பரவுமாழத்து ........*
வாரைங்கரனைமனநினைவாம் ........ (க)

(வேறு-விருத்தாம்பிகை துதி.)

இருட்கலிவலியின் ஞான நன்னெறிக ளிறந் துயிர்
கொடுநெறிமேவி—யருட்கொடுகலக்கா வகைக்கலி
யென்றம் வந்தணுகாப்பதிதன்னிற்—றெருட்சத்
தி[illegible]கருணையுருவதாய்நின்ற தெள்ளிக்கு மிறைவி



யெங்குருவே—ரருட்கடல் பெரிய நாயகியுலகுக்
கன்னைமுதல்வியைப்பணிந்திடுவோம்............ (உ)

(சபாநாயகர் துதி.)

திங்களார்சடையிற் [illegible]கைநீர் துளிப்பத் திருந்தி
ழையுமையுளங்களித்த—பொங்கராவொடுநற் பு
லிமுனிவர்கண்மால் [illegible]ாதயனமரர்கள்போற்றத்,
துங்கநான்மறைகடுதி[illegible]டவைந்து தொழில்விரிந்
திடப்பொதுவதனிற்—செங்கழலதிரநடஞ்செயும்
பொருளைத் தினம்பணிந்திடவொழித்திடுவாம் (௩)

(வேறு-சிவகாமியம்மை துதி-)

அருளுருவாயுயிர்கடமக்கன்னையாகி-யஞ்ஞான
ந்தனையகற்றியமலமாகி—மருளிலதாய்மெய்ஞ்ஞா
னமாகுமுத்தி-வாய்த்திடவேகாத்தருளி வானோரோ
த்த—விருள்கெடவேமிளிருமிருங்கழல்களார்ப்ப
விறைபுரியுந்திருநடத்தாற்களித்துவாழுந்—தெரு
ண்மருவுமறைநான்கும்பரவுந்தில்லைச்-சிவகாமசுந்
தரியையச்சிந்தைசெய்வாம்....................... (௪)

(வேறு-விநாயகர் துதி.)

செக்கர்போன்மொளிர்முக்கட்சிலம்பினை ........*
மிக்கபேரருள்வேலையையோர்கொம்பாற் ........*
றக்கவன்பர்க்குதவுந்தருவினை ........*
யிக்கதைநிறைவேறவிறைஞ்சுவாம்............ (௫)

(வேறு-சுப்பிரமணியர் துதி.)

கடிகமழ்கரியகூந்தற்கனிமொழித்துவர்வாய்த் தெய்வப் — பிடிதனக்கோட்டால்வள்ளிப் பெண் கொடிபடருஞ்செய்ய—படிகமழ்புயமாங் குன்றி ற்பாயவன்கழுநீர்நீப—மடலவிழ்செழுந்தார்ச்செ வ்வேண்மலரடிவணக்கிஞ்செய்வாம்..........(௫)

(வேறு-அடியார் துதி.)

வண்டுழாயலங்கன்மாயவன்மலர்மேல்·வதிந்தநா ன்முகன்மறையறியாத்— தொன்னைவாய்க் கெண் டைவிழிக்கழைமொழியொண் — டுடியிடையுமை யையோரிடத்திற்—கொண்டகோனருளைப்பொரு ளெனக்கருதிக்-குலவியசாதனந்தரித்து-மண்டியவ டியாரியாவர்மற்றவர்தாண்- மனத்திநுஞ்சிரத்திநு ம்வைப்பாம்..............................(௭)

(வேறு-அவையடக்கம்.)

சுகரர்தம்வவியையுந்தடந்திரைக்கட ........*
லகல்மும்பின்புளோரகழிலஞ்சிதான் ........*
புகழுமவிளக்கலேபோலவிச்செயு ............*
டனைதருகலைஞர்நூறணைவிளக்குமால்........(அ)

வேறு-நூனுதலிய பொருளும்-நூற்பயனும்
நூலாசிரியர் பெயரும்.

மிங்களொண்கவிக்கைத் திகிரியந்திணிதோட் டி றம்கடற்றுணைமாராஜ—னங்கண்மாநிலத் திற்றுறந் து விடடைந்த வரியவிக்காதையைத்தமிழா—லிங்

மகாராஜா துறவு. (௯)

குமாதவத்தோரிசையுமென்றிசைப்ப விசைத்தன ன்வீடுறக்கேட்டோர்—கொங்கவிழ்பொழில்சூழ்ப ழமலையுற்றையுங் குமாரதேவென்னுமாமுநியெ(௯)

(வேறு-வாழ்த்து.)

சிவன்றிருவுருவாமைந்து சின்மயவெழுத்தும் வாழி—நவந்தருநீறும்வாழிநயனநன்மணியும் வா ழி—கவின்றருங்குமாரதேவன் கழலிணையிரண்டும் வாழி — யவன்றிருவடியார்தம்மோடாருயிரனைத் தும்வாழி..............................(ய)

பாயிரமுற்றிற்று.

---

நூல்.

நைமிசாரணிய ரிஷிகள்.

மஹாராஜன்சரித்திரஞ் சொல்லும்படி கேட்கச் சூதர்சொல்லத்தொடங்கல்.

தருக்கிளர்நைமிசாரணியத்திற் றங்கியமுநிவர்க ள்சூதன் —வரப்பணிந்தேத்திக்கலைதகள்பற்பலவா வகுத்துரைத்தனைமகாராஜன் — திருக்கதை யெங்கட் குரைத்திலைய துநீ செப்பெனச்சுருதியிற் சொல்லு ஞ் — சுருக்கமில்காதை யிதுவெனத்தொகுத்து தோமறக்கேண்மினென்றுரைக்கும்.........(௰௧)

இது-௲-எ-பாட்டு.

அரசின்சிறப்பு.

குழைத்ததல்சினைத்தே மாவினெண் கனித்தே
ன் குலவியபலவினற்பலத்தேன்—றழைத்திடுகதலி
ப்பழனுகுத்திடுதேன் றூன்றிரண்டிலஞ்சியிற் றது
ம்பி — விழுத்தகுவய விற்பாய்தரவிளையு மிதுகரு
ணு-தேசந்தா—னிழைத்தநற்றவத்தா லுயிரெலா
ம்புரந்தங் கிருந்தரசாளுமோர்குரிசில்.....(௰௨)

(வேறு.)

மஞ்சமரிஞ்சிசூழ்மாபுரத்திருந் ...................*
தெஞ்சலிலெண்டிசையிறைவர்தாடொழுத் ....*
தஞ்சமென்றடைந்தவர்தம்மைக்காத்திகல் ...*
வஞ்சகர்க்காய்மகராஜமன்னனே ........ (௰௩)

(வேறு.)

தருநிமலர்சுவைகுஞ்சதமகன்றிருவின்மிக்கா -
ருவினின்மதனின்மிக்கானுலத்தினிற்பலத்ததோ
ளம்பா—முருகுடைந்தொழுகுந்தாரான்மூவுல
களிக்கும்வேலான்.........................................(௰௪)

வேறு.

அரசர்வந்திறைஞ்சியிறைபளக்குமுன்றிலான் ........*
...சுகளனுதினமுழங்குமன்றலான் .............*
...ரைபொருதிரைபொதிக்டலந்தானையா.........*
...னருவரைமார்பினன்யாளிமொப்பினன்...(௰௫)



அரசர்தம்முடியமுதவிருந்தாளின ..........*
னெரிதவழ்திகிரியையேந்துந்தோளினன் ....*
மருவலர்வலியினைமாற்றும்வாளினன் .......*
றருதிக்கொடையினன்றருக்குநாளினே....(௰௬)

(வேறு.)

கவரியோடாலவட்டங் காரிகையார்கள் வீசப் ...*
பவளவாயரம்பையன்னார்பாகடையுதவமுத்தத் *
தவளவாணகையார்கீதந்தனிநடஞ்செய்யநின்று *
குவலயமன்னர்போற்றக்குடைகடற்றனைகுழ(௰௭)
இந்திரனாலயம்போலிலங்கியமண்டபத்திற் ... *
சுந்தரமிருகராஜன்சுமந்தபூவணையின்மீது ... *
வந்திருந்தவனிதன்னைமநுநெறிமுறையிற் காத்தே
யந்தமில்போகந்துய்த்தங்கிருந்திடுமரசர் கோமா
ன் ...................................................(௰௮)

{ அரசன்றனக்குப்புத்திரனின்மையால் }
{ வியாகுலமுற்றது. }

தாம்புடைப்பிறையெயிற்றுத் தத்திபீராயிரந்
தோட் — பாம்பினுற்பரிக்கலுற்றபாரினைப்பரிக்க
ப்பின்னர்—மேம்படுபுதல்வர் நந்தம்வீறுடை வயி
ற்றில்வென்று—தேம்படுதெரியன்மார்பன்சிந்தை
யாகுலங்கனூற்றான் ......................(௰௯)

{ இது-௲-உ-பாட்டு - தீர்த்தயாத்திரை }
{ முதலியபுண்ணியங்கள் செய்தமை. }

கங்கையேமுதலாமிக்க கடவுண்மாநதியிற் றே

யந்தும் — பங்கயாசனன்மாறிங்கட் பவளவார்ச
டையான்றன்னை — யங்கையாற்பூசைசெய்துமதிதி
கட்களித்துந்தீயிற் — பொங்குமாகுதிகளீந்தும்பூ
வலம்வந்துதேவர் ........................(உ௧)

ஆலயஞ்சாலையக்கிராரநந்தனவனங்கள் ........*
கோலமாரிலஞ்சிகூபங்குளம்பலசெய்துமீரெட் *
டேனுமாதானத்தோடேயிரணியமுதலீரைந்து *
சாலநற்றானமீந்துந்தருமமெண்ணான்குசெய்தும்

{ இது-முதல்-உ-பாட்டு.
புத்திரோற்பத்தியும்-சாதகன்மமுதலியன
செய்தமையும். }

தவம்பலபுரிந்தும்வேந்தன் றனயனைப்பூத்த பி
ன்னர் — பவந்தனைத்துடைத்தேன்மேலாம் பரம
நற்பதமுமுண்டென் — றுவந்துசாதககன்மத்தோ
டொழிவறுகருமமெல்லா — நவந்தரச்செய்து நா
ம நன்மகராசனென்றே ..................(உஉ)

(வேறு.)

வேதநீதிபிற்கூறிவியன்றா ...................*
வோதவெண்ணெண்ணகலையுமுணர்த்துவித் ... ... *
சேதமற்றகுரவற்கிரணியம் ....................*
போதுமென்னப்பொழிந்தன்னகொண்டல்போல்



{ இரதபரீட்சைமுதலியவற்றிற்
பயிற்றுவித்தபின்-விவாகத்துக்குப்
பிரயத்தினஞ்செய்தமை. }

கொடிநெருங்குங்கொடிஞ்சியந்தேர்பரி..........*
கடமலிந்தகயமொண்சிவிகையிப்.................*
படியிலூரப்பயிற்றுவித்தாசிலா... ... ... .....*
வடிவிலங்குமகற்குமணஞ்செய்வான்..........(உ௪)

அரசர்களுக்குவிவாகபத்திரமனுப்புதல்.

மடங்கலன்னபலருள்ளமாமன்ன...............*
விடங்கொளெண்ணெழுதேசத்திறைவர்க்கு ... *
முடங்கல்போக்கினன்கண்டுமுடிமன்னர் ......*
தடங்கொள்சேனைகள்சூழ்வரச்சார்ந்தனர்...(உ௫)

வேறு-இது-முதல்-உ-பாட்டு.
நகரமலங்கரித்தல்.

வடிகொள்வெண்சுதையாற்பித்திகைதீற்றி வா
னுறமணிக்கொடி நிரைத்துக் — கடிநறுஞ் சாந்தங்
குங்குமந்தண்ணறு கமழ்தரமறுகெலாமெழுகிப் —
பொடிகள்சிந்துரத்தாற்கோலமேபுனைந்து பூமலர்
பொரிநனிசிதறிக் — கொடிகொண்மூதேயின் மே
ன்மாடமொண்சிகரிகோதறப்புதுக்கியேகுலவவுள

(வேறு.)

கதலியுங்கமுகுநட்டுக் காவணமலங்கரித்துப் —
புதியதோரணங்கள்கட்டிப் பொற்குடஞ் செறித்

துத்தீப—மிதமுறமெங்கும்வைத்தே யிந்திர நகர
ம்போல—மது மலர்தாமநாற்றி மாபுரியலங்கரித்
தரர் ..................................(௨௭)

இது-௲ ௩-பாட்டு-பெண்ணின்சிறப்பும்
விவாகஞ்செய்தலும்—வேறு.

வில்லிலங்குகைவேந்தர்மரபினி ..................*
னல்லசாமுத்திரிக நூலனன்கதாச்..................*
சொல்லிலக்கணத்தீதாடு தரிசிலா..................*
முல்லைமாலைமுருகுவிரியவே.................. (௨௮)

(வேறு.)

மூவுலகதனி லுள்ள மூகிழ்முலைக் கருங்கட்செவ்
வாய்—பாவைபொழிலிற்போதன் பகுத்தெடுத்தி
யிரோடேய—வோவியந்தீட்டி னனென் றுலகினி
லுரைக்கச்செய்ய—பூவுறைதிருவிரும்பும் பொற்ப
டனவதரித்தே.................. (௨௯)

(வேறு.)

இலங்கியவாலொண்டளிர்குழைத்தினிய விருந்
னக்கோங்கிணையரும்பி—நலங்கிளராம்பல் குமிழி
ருகுவளை தண்ணனுசெஞ்சரோருகம்பூத்துத்—துல
ன்றிடங்கிப்—பலந்தரப்பட்டுருங் கொடியினைவேந்
ப் பண்பினின்மன்றல்செய்விதித்தே.......... (௩௰)



மகாராஜனுக்குப்பட்டாபிஷேகஞ்செய்தல்.

(வேறு.)

அருந்ததிகணவன்முதன்முனிவரர்க ளருமறைக்
கிழவர்கடம்மொடு—பொருந்தியகங்கைப் பூம்புன
லாட்டிப் பொன்னவமணிகளாற்குயின்ற—விரிந்
திடுமடங்கன் மென்றவிசேற்றி மிளிர்நவமணிமுடி
கவித்துப் — பருந்தடர்வேலான் பௌவுமார்புவி
யைப் பரியெனத்தோன்றல்பாலளித்தான்...(௩௧)

மகாராஜன்மனைவியோடுவாழ்ந்திருந்தா
னெனச்சூதர்சொன்னமைகேட்டிரிஷிகள்பின்
னும்வினவச் சூதர் சொல்லத்தொடங்கல்.

சோகமேயின்றி யிருந்தனன்வேந்தன் றேன்ற
லும்பார்பொதுநீக்கி—யேகமாச்செங்கோலெங்க
னுஞ்செல்லவெண்டிசைவிசயமுஞ்செய்தே—மா
கநாடென்னப் போகமேதுய்த்து மடந்தையோ
டிருந்தனனென்றுன்—வாகைவேலவன்பி னென்
செய்தானென்ன மறையவர்க்குயர்முனிவகுக்கும்.

இது-௲-௨-பாட்டு மகாராசன்முத்திக்கு
ஞானமேசாதனமென்றுணர்த்தல்.

மனைவியுந்தானுமோர்நினைவாகி மாறுபாடின்றி
யொர்காலுந்—தன்னையுணர்யோகி தந்தைதாய் கடு
வுடங்களை யறுகிலைமிறைஞ்சி—யனையவிருளைத்த
நெறிதனிலடந்து மருத்தங்கண் மனமினிற்றரித்து

ம்—வினயமதுடனே நூன்முறையவனை வினவி
யுங் கிலபகல்போக்கி............................. (௫௩)

தனியிடமதனி லிருந்திருவர்களுந் தங்களிற்று
றுணர்ந்துசாவித்—துனிசெய்மாமாயைப் பிறப்
பதுநீங்கிச் சுகமதையடைந்தனு தினமு—மினிமை
யதாகவிருக்கலாஞானத் தென்றெணிஞானிகட்சா
ர்ந்து—நனியவர்பாத பூசனைபுரிந்து நாடொறும்
வினவினர் நன்றாய்.............................(௫௪)

{இது-௫௫-௫-பாட்டு-அந்தஞானம் சற்குருசே
வையின்றிவிளங்காதெனத் துணிதல.}

இருவரிலரசன் றனக்கறிவோங்க விருவகைச்சார்
வையுமகற்றிக்—கருவுடற்காவறனையுங் கைவிடுத்து
க் கருத்தசையாது மெய்யுணர்வை—மருவிடிலகப்
பற்றற்றுமேல்விடு வாய்த்திடுமதற்குமெய்ஞ் ஞா
னக்—குருவருளின்றி விளங்கிடாதெனவே:கொண்
டனன்மனத்தினிற்றுணிவே..................... (௫௫)

மனைதனிலாசை பொருந்தியேநின்று மகிமையி
ன்ஞானியாமெனவே—தனைமிக்மதிப்போன் றன்
னைவந்தொருவன் றந்திடுஞானமென்றிரந்து—வி
னவன்பட்டையினைப்பூருகுவோன் றன்னைவேண்டி
த் தென்னம்பழந்தனையே—யினம்பணிந்திரிவோ
ன் புத்திபோன்மெனவே யியம்புவர் மூற்றுணர்
பெரியோர்...................................... (௫௬)



வேதவாகமசாத்திரபுராணங்கள் விளங்கவே கற்
றுணர்ந்தவற்றைத் — தீதறவெவர்க்குந் தெளிவுற
வோதிச் செப்பியவந்நெறியதனிற்—சாதகமிலாத
குருவினையொருவன் றனடைந்தானந்தம்வினவ-
லேதமாங்கழுதை தன்னைக்குங்குமத்தி னியல்புகே
ட்டிடுதல்போன்மென்றே.................... (௫௭)

சற்குருவையடைந்து விண்ணப்பங்கூறல்.

சீவர்களிடத்தி லருள்சிவபத்தி திருந்தியதுறவு
மெய்ஞ்ஞான—மாவதோர்வடிவாம் வேதமாமுனி
யை யமலவாரணியத்தி லடைந்தே—தேவர்கடே
வே துன்பமோர்காலுஞ் சென்றிடாமுத்திதானெ
ய்திச்—சாவதும்பிறப்பு நீங்குமோர்நெறியைச்சா
ற்றெனத்தாழ்ந்திடமுனிவன்.................. (௫௮)

சற்குருமாணாக்கனுக்கு உபதேசித்தல்.

இருவகைச்சார்வாம் புறப்பற்றைநீக்கியிச்சையி
ன்மீட்டதினினைவு—மொருவியேயுடற்கா வலையுங்
கைவிடுத்தே யுட்கரணங்கள்வாதனையுங்—குருவரு
ணெறியே யொடுக்கிடில்வீடுங் கூடுந்தானாகவேப
வத்தின்—கருவழிந்திடு மிந்நெறியைநீ விரைவிற்
கைக்கொண்டு செல்லெனவுரைத்தான்...... (௫௯)

{மகாராஜன் சிலகாலத்தின்பின் தனித்திருந்து
உபதேசமொழிகளைச்சிந்தித்தல்}

அந்நெறிகுருவாலையமுத்திரிவுமகன்றிடத் துணி

வதாக்கேட்டு—முன்னெறியான வரசியற்கையினி
ன் முயன்றனன்சிறிதுநாளொருநாட்—பின்னெ
றியதனை நினைந்தனைவரையும் பெயர்ந்திட விடை
கொடுத்தரசன்—மன்னெறிக்கோல மகன்றந்தப்
புறத்தில் வதிந்தனனொருவனுய்த்தனித்தே...(௪௰)

இது-ஸ்ரீ உ-பாட்டு-தன்னைவந்துகண்ட
அரசர்முதலாயினோர்க்கு இனி அரசியற்றலைவேண்
டாது துறவுபூண்டு வீடடைவேனெனக்கூறல்.

அரசர்களமைச்சர் புரோகிதர்பெரியோ ரனைவ
ருமவ்விடத்தேகி—யரசனைநோக்கி நித்தியகரும
மகன்றுவாளாவிருந்திடுத—லரசிலக்கணமன் றெ
னவவர்வேண்ட வவர்களைநோக்கியேவேந்த—னர
சியற்கையினை வேண்டலனென்னை யறியவேவேண்
டினனென்றே.............................(௪௰௧)

ஆண்டதோரரசு தனிலும்போகத்து மாசைபற்
றேனினிவேண்டேன்—மாண்டதோர்வனத்திலொ
ருவனுய்த்தனித்தே மனத்தசைவறுத்துவீ டடை
வேன்—பூண்டவென்மனமீங் கினித்திரும்பாது
போகத்தைப்பொருளென்றெண்ணி—வேண்டலி
னீங்க ளரசனைவேறெவிதித்துக்கொளுங்களென்று
ரைத்தான்.............................(௪௰௨)



இது-ஸ்ரீ-மூன்றுபாட்டு-இராச்சியத்தை
விடலாகாதென மந்திரிமார்வற்புறுத்த-மகாராஜன்
இராச்சியத்தின் துன்பமும் முத்தியி
னின்பமு முரைத்தல்.

ஆதியினின்றுதாதையுனையேயரசினிளமை
யிற்சூட்ட—நீதியின்றியுனது புயவலி மையினிற்
செம்மைதைதாங்கினையினிமே—நீதியினுண்ணிய மதி
யினுதரவினின்னைப்போலொருவர் மற்றுளரோ—
வீதியற்கையதன் றிவ்வுடனேயிச்செல்வ மன்றி
வேறுளதோ.............................(௪௰௩)

அலதுநீயேகினவனிபங்காப்பற்றவத்திலே யலைந்
திடும்யாமுஞ்—சலனமதுறுவே மித்தகையெமை
நீ தவிக்கவிட்டேகுதல்கடனன்—றிலகிட வெமக்கீ
தருளெனவமைச்சரியம்பிடவரசனும் பார்த்தே—
யுலகமெய்யெனவெண் ணுறு மதியுடையோர்க் கு
ரைப்பினுமுணர்வுதியாதால்.............................(௪௰௪)

இவ்வரசியற்கையற்பமற்றிதனாலெய்திடுந்துன்பி
னிக்களவின்—றவ்வகையதனை யூகமின்மையினலறி
கிலிர்நீங்களின்பென்றே—யெவ்வகைநினைந்தீரினி
யெக்காலுங்கட்டின்பமலதென்னத்தோன்று-மொ
வ்வமற்றிதனுக் கசுகமேதோன்றுதுங்களுக் குலக
சூகுதிக்கும்.............................( ௫)

மகாராஜன் நகரைவிட்டுப்போம்போது நகரத்தார் போயழுதல்.

என்றுமற்றனேகமாவிரித்தரசனெடுத்தமைச்சர் கூடமக்கியம்பி—நின்றுபின்னவரைநிலுமெனநிறுத்திநிதியுறும்பொன்மனைவிடுத்தே—சென்றுபின்னகரவீதியினடக்கத்திரண்டனைவர்களும்பின்றொடர்ந்து—வன்றுபரடைந்துவாடியேமெலிந்துவாரியிரைசையினழுதார் .................... (சுகா)

இது-ஃ-உ-பாட்டு-நகரத்தாருடைய துக்கத்தைச்சாந்திபண்ணல்.

அவரவர்வினையினவரவர்வருவாரவரவர் வினையளவுக்கே —யவரவர்போகமென்றதேயாயிருக்கார் துணையதாகுவர்க—ளவரவர்தேகமுள பொழுதுடனேயாதரவாமெனநாடி—யவரவசடைதனெகின்மத்தடையு மாதரவாதரவாமோ .... (சுஎ)

வினையுளவளவுங்கூடியேநிற்கும் வினையகன்றிடிற்பிரிந்திடுமால்—வினையினால்வருமாதரவினி னியற்கை மெய்யுணர்வத்தகையலவே—வினையில யுங்களிடத்தினுனிருக்கமெய்யுணர்வொன்றையேநாடி—வினையாலகனம்புகுதவேவேண்டி விரும்பினேனினிலுமிங்ஙன்.................................. (சுஅ)



உறவினர்கள்தமதுறவுபாராட்டி அரசனைத் தடைப்படுத்தல்.

என்றுநல்வேந்தனேதிலார்போல் வெகினனனை வருங்கண்ணீர்— நின்றெதிர்சொரிய வாய்விட்டேயலறிநின்றனர்தமர்கள்பின்னேகி — யின்றெமையாவர்காத்தளித்திடுவரினியைநீயேகுதனீதி—யன்றெனவுரைத்தாரவர்களைநோக்கி பரசனீ துரைத்துனன்றே......................................(சுகூ)

அரசன் உறவுபகை வேறெனல்.

(வேறு.)

உறவாகுமெனவெனைநீர்தொடர்பதியல் பன்றுகுழுயிர்கட்கெல்லா—முறவாகுஞானதனிப்பகையாகுமஞ்ஞான மூய்த்துநோக்கி—னுறவானவதை யடைந்துபகையானவிதைநீங்கியொருமையாக—வுறவாதறனக்குத்தானேயெனமற்றுறவுவிடுத் துறையுமென்றான் ................................ (ருய)

தாய் தந்தையர் அரசனைத் தடுத்தல்.

தந்தைதாயிருவருந் தம்புதல்வனெனும் வாஞ்சையினாற்றும்பின்னேகி—மைந்தவாவெங்க ளிருவரையுமவர்காப்பதற்குவைத்தாய்நீதான் — சிந்தைதானுனக்கெங்கேமகனேயுன் திருமுகத்தைத்திரும்பிக்காட்டாய்—நொந்துதான்பெற்றவயிறெரிகின்றதெனவுரைக்கநோக்கிமன்னன்......... (ருக)

### அரசன் நீவிர் தாய்தந்தையரன்றெனல்

அறிவைநோக்கிடிலதற்குத்தாய்தந்தையில்லையிவ்
வுடல்தனைநோக்கி — விறையுநீருபாதானகாரணமன்
றிருமாயையினிலுண்டாகும் — குறியிதுவிங்காயி
ன்மண்ணிலெனைப்பெறுதவரில்லைக்கொள்கைநீரு —
நிறையுமதியிலரோநீர்நில்லுமெனவிருவரையு நீத்தி
ப்போனான் ........ ................... ............ ... *

(மனைவிவந்துதடுத்தல்.)

அரிவையர்கடமக்கிலக்கணங்கூறு நூலதனி லத
னையெல்லா-முரிமையதாவுடையவளாமினியமனை
தொடர்ந்தேகியுருகிநின்று — பரிவினுடனடிகள்ப
ணிந்தரற்றியேபதைபதைத்துப் பனிகண்பாயத் —
தரியனுமைவிடுத்துலக மதனிலொரு கணமேனு
ஞ்சாவேனென்றாள் ,.................... (௫௩)

(அரசன் நாயகன் வேறெனல்.)

நின்னுடையநாயகனைநின துள்ளே யுறநோக்கி
நிற்கமாட்டா — துன்னுடையநாயகனென்றெனற
னையேகருதிநீயுழல்வதென்னே - மின்னனையவிட
யாய்கேளனைவருக்குநாயகனோர் மேலாமீச — ன
ன்னவனையேதேடிப்போகின்றே னெனவரசற் கரி
வைசாற்றும் ........ ................. (௫௪)

{மனைவிபெண்களுக்குக் கணவனையின்றிக்
கதியில்லை யெனல்.}

ஞானமான துபொதுவே நூலதனிற் றுறவதற்கு



நவில்வதில்லா — ளானமாதினையலவோவிடுகவென
வரையும்பதியானவுன்னை — யீனமாவிடுகவென வ
ரையுமதோ துறவறமிக்கெனக்கேன் சொல்லு —
மானதாலுமையொழிந்துகதியில்லையேயெனவெணி
யானடுத்தேனென்றாள் ............. ...(௫௫)

(அரசன் மறுத்துச் செல்லல்.)

ஆகமத்தின்விதிதவறு தறைந்தனைநீ விவேகியே
யாவாயானுந் — தேகமுதற்பிரபஞ்சமதனினை
விடுத்துவனஞ்செல்லாநின்றே — னுகமூலையா யெ
னைதடுத்த லுன்றன்விரதமல நாடுதன்னிற் —
போகுதியென்றவளை விடுத்தேதிலனைப்போலகன்
றுபோகாநின்றான் .............. .... (௫௬)

{இது-௫௰-௨-பாட்டு-மனைவிபுலம்பிக்கொண்டு
மாமன்வீட்டிற்குப்போய்விடல்.}

விரிவாயஞானமதையுணர்ந்தாலு மடந்தைபதி
விலங்கநிற்ற — லரிதாயதகைமையினாலேங்கியே ப
தைபதைத்துமவனைநோக்கித் — தரியாதுக்கதறியே
வினைதனையேநொந்துதான்றளர்ந்துநின்று — தெ
ரியாதுமறைந்தவிடந்தனின்மிகவுமுருகியேதேம்
பிவீழ்ந்து ........................ (௫௭)

வேந்தனேயுனைவிடுத்து மூலசமதி லிருக்கவோ
விதித்தானீசன் — தீர்ந்ததோவுமக்கெனக்கும் வி
னைதானுமின்றளவிற்சேர்ந்துநிற்கும் — போந்தவு

மையெக்காலங்காண்பேனினியெனவே புலம்பி
மாதுஞ்—சார்ந்தனள்பின்றிருப்பியே நகரதனின்
மாதுலஞ் நன்சார்புதன்னில் .............. (௫அ)

இது-௫௯-௰ச-பாட்டு-அரசன் வனத்திலே
ஞானியாய்த் திரிதல்;

அரசனந்தநகர்விடுத்துத் தேசநாடுகளு மகன்ற
டவிசென்றே—யிரவுபகலகநிலையேநிலையான விரு
ந்தவர்களிடத்தேசென்று—பரகுருவி னுபதேசத்
தரியபொருள்வினவியவர்பகரக்கேட்டுத் —. நிரம
ணழாயொருவராற்கலங்காத ஞானியாய்த்திரளுகி*

(வேறு.)

நகர்தனிலேவிப்பிச்சை நண்ணியே மனைகடோ
று—மகமகிழ்ந்தங்கையேற்றேயவ்விடத் தருந்தி
யாங்கே—சேசருளோர்பேயென்றெண்ணிச்சிரித்
திடநாணமின்றி—யிகபரத்திச்சையற்றே யேகனு
யுலாவலுற்றான் .................. (௬௰)

பொருந்திவாழிடமொன்றுகிற் பொருந்திடும்ப
ற்றென்றெண்ணி—யிருந்திலனேரிடத்து மெங்கெ
ம்பிடா துறைக்கவுன்னி—இருந்திருந்திடங்களெங்
குமேகமேநோக்கிநின்றான் ............ (௬க)

தோன்றுமுலகையெங்கே தோன்றுமென்
றேநோக்கித்—தோன்றுதினைவிலென்றேதோன்றிய



நினைவுதானுந்—தோன்றுமிடத்தைப் பார்த்துத்
தோன்றுஞ்சொரூபத்தென்றே — தோன்றும்
பொருள்களெல்லாஞ்சொரூபமேயென்றுகண்டா
ன். (௬உ)

தோன்றும்பொருள்களுண்டாய்த்தோன்றியே
யின்பமாகித் — தோன்றுமதனுலந்தச் சொரூப
மேயென்றுகண்டு—தோன்றுஞ்சொரூபந் தன்
னிற்றோன்றுமிதசத்தேயென்று — தோன்றுஞ்
சொரூபந்தானுய்த் துளக்கமற்றிருந்தான் வேந்
தன். (௬௩)

கடிநகர்தோறுஞ்சென்றுங் கானகந் தோறுஞ்
சென்றும் — படிவிலமாகவந்தும்பார்வைமாறுட்
டமின்றி—மடிவிலாமனத்தனாகி மாசிலாநிலைமை
பெற்று—முடியுடைவேந்தர்வேந்தன் முத்திவே
டிவமானான். (௬௪)

முத்தியேவடிவமான் முடியுடைவேந்தர்வேந்த
னெத்திசைதனக்குமரசனென்னைவிட வேறில்லெ
ன்று-சத்தியமாகவெண்ணித் தன்னிடமகலிற்றன்
னைச்—சுத்திசெய்தனைத்துமாகிச் சுயஞ்சோதியா
கிநின்றான். (௬௫)

தன்னையேயன்றியொன்றுந் தானுதியாவிடத்தி
ன் — பின்னையேயொத்தவைய மித்தைதத்திதம
சென்றும்—பொன்னையேயன்றி வேறுபுடையில

துபோல—வென்னையேயன்றியொன்றுமில்லெண
த்தேர்ந்தான்வேந்தன். (௬௬)

உலகினைவேறதாகவுணர்ந்திடிற்பந்தமாகு—மு
லகினைத்தானேயாக வுணர்ந்திடின்முத்தியாகு—
மிலகிடத்தோன்றலெல்லா மென்னினைவே யென்
றெண்ணி—யிலகிடக்கண்டுவேடற்றிருந்தனன் னி
ளமைவேந்தன். (௬௭)

ஏகசக்கரமதாக விருந்தரசாள்வோன் செல்வ
ப்—போகமுந்திரணமாமப் போதநாட் டரசியற்
கை—யூகபுத்தியினாலாசா னுபதேசத்தாளவந்தச்—
சோகமற்றிடுநாடெய்தித் தொழிலெலா முடித்தா
ன்மன்னன். (௬௮)

பந்தம்வீடென்றுமில்லை பரம்பொருளொன்
றேயென்றுந்—தந்தஞ்சங்கற்பத்தாலே சாலமோ
கிப்பார்நீயோ—ரந்தமாதிகளுமில்லா வரும்பொ
ருளுமேயென்று—சந்ததநோக்கியந்தத் தற்பரந்
தானேயானான். (௬௯)

குறைவிலாநிறைவதாகிக் குளிர்ந்திளைப்பாறிவே
ந்த—னிறையளவேனுந்துன்ப மின்றியேயின்ப
மாகி—யுறைவிடமின்னதென்ன வோரிடமின்றி
யெங்கு—நிறைவதேயிடமாய்நின்று விளங்கினா
னரசன்றானே. (௭௰)

எங்குமாய்நிறைந்துநின்ற வேகராச்சியமதாள்
வோன்—றங்குதலின்றியெங்குந் தானெனக்கண்டு
மீயோ—னிங்குறைந்தகன்றபாண்டத்தியல்பின்ன



னுசருவம்பற்றி—யங்குருவகற்றிநின்றானந்தியா
கிவேந்தன். (௭௧)

சீவன்முத்தர்கள்பானிற்குஞ்செப்பியமனத்தரூ
ப—மேவரும்பரமமுத்திமேவிடி[illegible]சமாகுந்—தா
னுருநிலைமைநன்றாச்சற்குரு வருளாற்பெற்றுக்—
கேவலமாகிநின்றான்கேடிலாஞானவேந்தன் (௭௨)

{இது-௲-சு-பாட்டு-மந்திரி அரசனிடத்திற்
போய் அவன் றன்மையைக் காணுதல்.}

இத்தகைஞானம்பெற்றேயெழின்முனியாகியெ
ங்குஞ்—சித்தனாய்த்திரிதறன்னைச் செப்புமுன் ன
மைச்சர்தம்முள்—வித்தகனொருவன்கேட்டு வின
விடவேண்டுமென்றே—கத்தனுமரசைத்தேடிக் க
ண்டடிபணிந்துநின்றான். (௭௩)

பூவணையாகிவானம்பொருந்துமேற் கட்டியாகி
த்—தீவமதாகியிந்துசெங்கதிர்வீசுங்காற்று—மே
வுசாமரமதாகிவிடுதலைமனைவியாகிக்—கேவலமின்
பமாகிக்கிளர்ச்சியாய் நின்றான்வேந்தன். (௭௪)

ரதமுதற்சேனைசூழ ரத்நசிங்காசனத்தில்—வித
விலங்காரத்தோடு வீற்றிருந்தமரும்வேந்த—னுத
வுகோவணமுய்மேனி யுருத்தெரியாதநீறும்—மு
தன்முடிவிரித்துநின்றான்முனிவனுமொருவனாகி*

கரிரதபரிவர்தமின்றிக் காவலையர்கியெங்கு—
முரியதோர்மனைபூணின்றி பூரெங்குமுண்டாகி—

பரியசாசாங்கக்கோல மகற்றியேதவாங்கமாகித்—
திரியுமவ்வரசைநோக்கிச் செப்பினனமைச்சன் று
னே.
(௭௬)

(இது-[illegible]-௨-பாட்டு-மந்திரி அரசனை வினாவுதல்)

அவனியினினக்குமேலோரரசனுமில்லையிந்தத்—
தவவடிவாகியெங்குஞ் சரித்திடலெத்தினுக்கோ—
நவமதாயுடலிதோடே நன்னுவமெதனையிதன்றி—
பியவெண்ணக்கருவ வேண்டு மெனக்கறிவோங்குமா
றே.
(௭௭)

பதத்தினைவேண்டின்முன்னம் பற்றிநின் றில்ல
றத்தைப்—பதப்படநிறுத்தியேகல் பண்பதாமே
லாறுத்திப்—பதத்தைவேண்டிலோஞானப் பார
வையிற்கூடுநீறேயப்—பதத்தினைவேண்டியிந்தப் ப
ரதேசியானதென்றான்.
(௭௮)

இது-முதல்-௬-பாட்டு-அரசன் மந்திரிக்கு-
உத்தரங்கூறல்.

அமைவுடையமைச்சின்மிக்கோ யடைவுடன்வி
ன்விக்கேட்டா — யிமையளவேனுஞ்சித்த மிதுவ
மெவனவோடா து—சமைவுடன்கேணீ சொன்ன
சங்கைக்குத்தரங்கணன்றாய் — நமைவிடவேறோர்
வேந்துநாட்டிலையெப்பதொக்கும்.
(௭௯)

பதமுதைவேண்டினில்லைப் பதப்படநிறுத்தியே
க—லிதமென்மலொக்குமுத்தி யெய்துதன் ஞான



ப்பார்வை—விதமதிற்றேன்றுமென்றாய் விருப்ப
மாக்குடும்பபாரத்—திதமதாயமுந்துவோருக்கெ
ங்ஙனம்பார்வைதோன்றும்.
(௮௰)

மனமிருபொருளைப்பற்றமாட்டாதட்டாவதான *
வினமுவைபுறநோக்கானவேதினுற்கூடும்வீடு *
கனவுண்ணுக்காகுமில்லங்கருதியபுறநோக்காகு *
மனசவிவ்வுகந்தோன்றவறைகுவநாமேகேளாய் ()

(வேறு.)

தென்றிசைநடப்போர்கங்கை சென்றதோய்ந்
திடுவரோதா—னன்றியுமவனிவாழ்க்கைக் கமைச்
சர்களுடனேகாந்த—மொன்றியேயூகஞ்செய்வோ
ருலகவேந்தாயினோர்க—ளின்றிதைநோக்காயி
ல்லினிற்பவர்முத்திசேரார்.
(௮௨)

பாசந்தான்பகையதாகப் பார்வைபெற்றிடிற்பா
சத்திற்-பாசந்தான்வைத்தப்பின்னும்பற்றவுங்கூடு
மோதான்—பாசந்தான்பகையதென்றே பகருநா
ன்மட்டேகற்றோர்-பாசந்தான்விடவுமாட்டார்பர
மெலாமெங்ஙன்போக்கும்.
(௮௩)

அந்தமாதியமிலாவீடடைந்துடற் பிறப்பறுக்
க—சுந்தரஞானம்போதுந் துறவறமேதுக்கென்
றே—மந்ததிகாரியோரைமதித்துநா லினைக்குஞ்
செய்தி—யந்தமதானபேருக் கத்தகை விளம்பா
தென்றும்.
(௮௪)

(வேறு.)

தோன்றுகின்றபொருளியல்புந் தோற்றுவிக்கு
ம்பொருளியல்புந் — தோன்றவுனக்கியாமுரைக்கச்
சோகமறக்கேட்டிடுவாய் — தோன்றும்பொருள்கள
நித்தமுமாய்த் தூய்மையின்றித் துக்கமுமாய்த் —
தோன்றுந்தோற்றுவிக்கும் பொருள்சுகமாய்ச் சு
த்தநித்தமுமாம். (அரு)

பாலனானபருவம்போம்பின் னாகுமாரப்பருவம்
போங் — கோலமானதருணம்போங் கோலமூன்றி
க்குணத்தெழுந்து — காலன்மாய்க்கவனைவர்களுங்
கல்லென்றழுதுபேர்மாற்றி — டேலப்பிணமென்
றொருபெயரிட்டிடுகாட்டிடுதலொருதலையே (அசு)

கருவினின்றுமழிந்துபோங் கண்டகுழந்தையி
னுங்குமரப் — பருவந்தனினும்போந்தருண பருவ
ந்தனினுமழிந்துபோ — மருவநடுங்கு மூப்பதினு
மொடுங்குமெந்தக்காலையினு — மொருவியழித லி
யல்பாகு முலகத்துடலின்வாழ்க்கையுமே (அஎ)

பஞ்சபூதமழிந்துபோம்பானுத்திங்க ளுடுக்கள்
போம் — வஞ்சவசுரர்மடிந்திடுவர் மாகர்பதம்போ
ம்வல்லரக்கர் — அஞ்சுவார்கள்போகிபதந் அஞ்ச
ம்பிரமன்பதந்தானுந் — அஞ்சுந்திருமால்பதந்த
ஞ்சுந் அஞ்சாதொன்றேபரமபதம். (அஅ)



தோலிரத்தமெலும்பிறைச்சி சுக்கிலமேதை மச்
சையொன்றாய்த் — தாலிகரித்தவுடம்பாகுந் தொ
ட்டவையுந்தன்வடிவாய்க் — கோலியடக்கிக்
கொளுமிதனைக் கூறுகூறுநோக்காது — போலியு
ணர்வோர்மகிழ்வெய்தும் புனிதமென்றும் பரம
பதம். (அகூ)

அரந்தையதனைபொழுங்காக வறைபக்கேணிய
வனியெல்லாம் — பரந்தசிருட்டி திதியொடுக்கம்
பண்பாதிகமுஞ்சிருட்டிதனிற் — பொருந்து பெரி
ய துன்பைந்து போய்மாண்டிறிலதெண்மடங்கே -
யிருந்ததிதியுமிரண்டாகு மிளமையென்று மூப்
பென்றும்.......................... (கூ௰)

விருத்தபருவமிகத்துன்பம் விளங்குமிளமையி
ரண்டவையின் — வருத்துபிணியின் மிகுத்துன்பம்
வளமையிளமைமூன்றாகுங் — கருத்ததறியாக் குழ
ந்தையென்றுங்குமாரமென்றுங் காளையென்று —
மருத்தமறியாததிற்றுன்பமடையும்பாலப் பருவ
த்தில்.................................(கூக)

தந்தைதாயராசிரியர்தாங்கள்புனித நனக்கஞ்
சிச் — சிந்தைகலங்குங்கவுமாரஞ் சிறந்ததாளைப்ப
ருவத்தில் — மூந்துபசிநோய்காமநோய் மூடுகித்த
ணிக்கப்பொருடேட — விந்தப்புவனத்திரவுபகலி
டையறுத்தொழிற்றுன்பம்.................. (கூஉ)

மெய்ஞ்ஞானக்கண்ணைவிழித்துப்பின்னம்மானே
கருத்திற்றண்ணிவைக்கருதினின்றம்மானே (௫)
கண்டபடிபேசுமறுகேனம்மானே (௬)
தந்தைதாய்தாரந்தமரோடுமம்மானே (௭)
சாற்றுமுயிர்ச்சார்வுதனம்பணியம்மானே (௮)
புவிகாணியென்னும்பொருட்சார்வுமம்மானே (௯)
புறப்பற்றெனுமிவைபொருந்திநின்றம்மானே (௰)
குலஞ்செல்வமுங்குழகுங்கோலமம்மானே (௰௧)
குறைவில்லையெனவெணிக்கொண்டுழன்றம்மா ( )
திரிதருகின்றேன்சிலகாலம்மானே (௰௩)
செம்மைநெறிதன்னைச்சிந்தியாதம்மானே (௰௪)
சிவநேசந்தவந்தானஞ்செய்யாமலம்மானே (௰௫)
சித்தந்தெளிந்ததுதெய்வீகத்தம்மானே (௰௬)
அநித்தமசுத்தமரந்தையேயம்மானே (௰௭)
ஆனவிம்மாயையசத்தேகாணம்மானே (௰௮)
நித்தியநின்மலநிடின்பமம்மானே (௰௯)
திருமானமுத்திநிலைசத்தேயம்மானே (௨௰)
என்னவுணர்ந்தபினில்லின்பையம்மானே (௨௧)
ஏறநோக்காதினிமைதனிலம்மானே (௨௨)
பொய்யெனவிட்டுப்பறப்பட்டேனம்மானே (௨௩)
போதகுருச்சாந்தன்பொன்னடிக்கம்மானே (௨௪)
வந்துதித்துவணங்கினேனம்மானே (௨௫)
மலரடியென்சென்னிவைத்துப்பின்னம்மானே ( )
முத்திநெறியைமொழிந்திட்டனம்மானே (௨௭)
முத்திரியத்தவமுடிபென்றனம்மானே (௨௮)



அவனுரைத்தபடியங்கிருந்தம்மானே (௨௯)
அல்லும்பகலுமசைவறவம்மானே (௩௰)
மேவிநின்றேதவமேவினேனம்மானே (௩௧)
விருத்தவம்பிலகவந்துவிளக்கினுள்ளம்மானே (௩௨)
அவன்விளக்கநன்றாயனுபவமம்மானே (௩௩)
ஐயந்திரிவறவறிந்தேன்காணம்மானே (௩௪)
எம்மதத்தோர்க்குமெழில்வீட்டிலம்மானே (௩௫)
ஏகமாயனன்னியமெய்துதலம்மானே (௩௬)
சம்மதமத்தகைசம்மதிக்கம்மானே (௩௭)
தத்துவமசியென்றுசாற்றிடுமம்மானே (௩௮)
இந்தச்சம்மதிக்குயிரீசனுமம்மானே (௩௯)
இருமுதலென்றழிவுகாணம்மானே (௪௰)
ஒன்றாகின்முத்தியுமொன்றேதென்றம்மானே (௪௧)
உரைத்திடில்பின்னையிலொன்றுங்காணம்மானே ( )
பின்னையிலிருமுதல்பேசாமலம்மானே (௪௩)
பேசொணாதபின்னையிற்பிரமமொன்றம்மானே (௪௪)
(௪௫)
அபின்னையிலேகமாமனுபவமம்மானே (௫௬)
ஐந்தாரும்பின்னையிலனுபவமம்மானே (௪௭)
சத்தியின்றியுண்டுசத்திமானம்மானே (௪௮)
சத்திமானையின்றிச்சத்தியிலம்மானே (௪௯)
பந்தத்துக்கேதுவாம்பகர்பின்னையம்மானே (௫௰)
பந்தம்விடற்கேதுபகர்மற்றதம்மானே (௫௧)
இப்பந்தம்விடின்றியிருந்திடுமம்மானே (௫௨)
ஏகமதையன்றியிலையில்லையம்மானே (௫௩)
[illegible]துணிவம்மானே

ஆந்திரிவிருமுதலாகுமென்றம்மானே (௫௪)
பிரத்தியக்கமதாகப்பேசுகேனம்மானே (௫௫)
பிராகாயாவமதிற்பிரயமொன்றம்மானே (௫௬)
நினைவிற்கூடிய பின்னை நிகழ்மாயையம்மானே ()
நிஜமாய்நோக்கிடிலிரண்டாய்நிகழுங்காணம்யா ()
நினையுந்தனையன்றியில்லாதென்றம்மானே (௫௯)
நீக்கிடிற்றானேயாய்நிகழுங்காணம்மானே (௬௰)
தோன்றுதலெல்லாஞ்சொரூபமென்றம்மானே ()
தோன்றுதல்வேறென்றுசொல்லிடிலம்மானே (௬௨
ஐந்துபதார்த்தமுமாறுறமம்மானே (௬௩)
ஆகிவேறுபோலமர்ந்திடுமம்மானே (௬௪)
அனைத்துஞ்சொரூபமென்றனுபவத்தம்மானே ()
ஆறுறமைந்துமதுவாங்காணம்யானே (௬௬)
இதனுறவெல்லாநன்மேயென்றுகண்டம்மானே (௬௭
ஏதும்பவிதப்பற்றிருந்தேன்காணம்மானே (௬௮)
என்சித்தேதய்யுண்டாயிருக்குங்காணம்மானே (௬௯)
என்சித்தேதோன்றியிடும்பின்னையம்மானே (௭௰)
என்னின்பேயின்பாயெய்துங்காணம்மானே (௭௧)
எல்லாஞ்சத்துச்சித்திலியங்காணம்மானே (௭௨)
என்னுலெல்லையுங்கண்டெய்தினேனம்மானே (௭௩)
இன்பமேயெய்தி யிருந்தேன்காணம்மானே (௭௪)
எத்தப்பொருளினு மின்பெய்தலம்மானே (௭௫)
என்னின்பமேயென் றிசைத்தேன்காணம்மானே.



ஆசைபயமவை யற்றேன்காணம்மானே (௭௯)
ஆநந்தநித்திய ஞானதாவம்மானே (௮௰)
நிகழ்காலமதுதனி னேரிட்டதம்மானே (௮௧)
நிராசையிற்றுய்த்து நிலைநிற்கேனம்மானே (௮௨)
என்னினைவிலென்னையிதுவெவ்வறேயம்மானே. ()
இன்றுனுவாய்க்கண்டிருக்கேன்காணம்மானே (௮௪)
என்னினைவின்மையிலேகமாயம்மானே (௮௫)
என்னையேயான்கண்டிருக்கேன்காணம்மானே ()
இங்குமங்குமென்னையானேகண்டம்மானே (௮௭)
ஏதுங்கவலையற்றிருக்கேன்காணம்மானே (௮௮)
அசைவுசெய்பின்னையில்லன்றேநின்றம்மானே (௮௯
ஆடுதலிதென்றறிந்தேன்காணம்மானே (௯௰)
என்னுணையெனையன்றியிலையொன்றுமம்மானே )
இது துணிவெனமருவேந்துவேனம்மானே (௯௨)
என்னையறியாமலிவ்வளவம்மானே (௯௩)
எங்கெவழிகாணுதேற்குமேயம்மானே (௯௪)
தன்னைநிகருகுஞ்சங்கரியம்மானே (௯௫)
தன்னருள்செய்ததயவினுக்கம்மானே (௯௬)
என்னகைம்மாறுமுண்டென்னிடத்தம்மானே ()
இனியவளடியவர்க்கெழிற்றணியம்மானே (௯௮)
விரும்பியேசெய்வதுவிதியிந்தவம்மானே (௯௯)
விருத்தகிரித்தலம்விளங்கிடவம்மானே (௱)

ஞானவம்மானை - முற்றிற்று.

 

ஏழாவது.

# வேதாந்தத்தசாவவத்தைக கட்டளை.

மோக்ஷமுண்டேன்கிற வெம்மார்க்கத்திற்கு
ம்-உபக்கிரமத்திற்பந்தமும் உபசங்காரத்தின்முத்
தியுஞ்சித்தாந்தமாகையினாலே இம்மார்க்கத்தி னு
டைய பெந்தமுத்திவிவகாரஞ்சுருக்கமாகச்சொல்
லப்படாநின்றதெப்படியெனில்-சத்தியம்-ஞான
ம்-அனந்தம்-ஆனந்தமென்னும் இலக்கணத்தையு
டைய சுயம்பிரகாசமாகிய பரவஸ்துவின் கண்ணி
ன்று வாசகஞ்செயவொணாதபின்னு சத்தி தோன்
றும்-அதினின்றுமாயைதோன்றும்-அதில் ஊர்த்
துவமாயையினின்றும் பரதத்துவந்தோன்றும்-அ
தினின்றும் வியோமந்தோன்றும்-அதிற் காலபர
ந்தோன்றும்-அதோமாயையினின்றும் புருடன்
றோன்றும்-அதின்மூலப்பகுதி தோன்றும்-அதின்
மான்தோன்றும்-அதிலாங்காரந்தோன்றும்-அந்த
வாங்காரந் திரிகுணமாகவிரியும்-அவையிற்சாத்து
விதாங்காரத்தின் மனமும் ஞானேந்திரியங்களை
ந்தோன்றும்-இராசதவாங்காரத்தில கன்மேந்
திரியங்களைந்துந்தோன்றும்-தாமதவாங்காரத்தில்



சத்தாதிகளைந்துந் தோன்றும்-இந்தசத்தாதி யை
ந்தையும் ஒவ்வொன்றை யிரண்டுகூறுபண்ணி-அ
வையிலொருகூறில்- ஒவ்வொன்றை நன்னான்குகூறு
கப்பண்ணி தனதுகூறல்லாத நாலினுங்கூட்ட ப
ஞ்சீகரணதூலபூதமாம் உபக்கிரமமுற்றும்.

இனித்தத்துவங்களினுடையவகையெப்படியென்
னில்-பஞ்சீகரணதூலபூதமைந்துசத்தாதியைந்து
ஞானேந்திரியமைந்து-கன்மேந்திரியமைந்து-அந்த
க்கரணங்கணான்கு-புருடன்-காலபரம்-வியோமம்-
பரம்-ஆகதத்துவமிருபத்தெட்டு—மேல் மாயை
யொன்று-பின்னுசத்தியொன்று-ஆக-௩௰-இவை
யெபந்தம்-இனியிவைமுப்பதுநீங்கி-மேற்சுயம்
பிரகாசத்தையடைதலே உபசங்காரம்-இதாக்குமா
ர்கமெப்படியென்னில்-தூலபூதமைந்து-சூக்ஷ்மபூ
தமைந்து-ஞானேந்திரியமைந்து - கன்மேந்திரிய
மைந்து-ஆக-இருபதுஞ் சிவசாக்கிரம்-இதிற்றி
ரோதாயிநீங்கும்-மனம்-புத்தி-யாங்காரம்-மூன்
றுஞ் சிவசொற்பனம்-பிரகிருதி சிவசுழுத்தி-புரு
டன் பரசாக்கிரம்-இதிற்பிரகிருதிநீங்கும்-காலப
ரம்-பரசொற்பனம்-இதில்-அசுத்தமாயைநீங்கும்
வியோமம் பரசுழுத்தி பரம்சிவசாக்கிரம்-மாயை
விசுவக்கிராசம் இதிற்கன்மநீங்கும் - பின்னுசத்தி
உபசாந்தம்-இதிற்சுத்தமாயைநீங்கும்-சுயம்பிர
காசமே துரியம்-இதில் ஆணவநீங்கும்-ஆவ

வத்தைபத்து - இதுவேமுத்தி - இவ்வொழுக்கெ
ஞானசாரியர்கைகாட்டுப்படிக்குச்சமாதியி லிருந்
து-அநுபவம்பண்ணிக்கொள்ளவேண்டியது.

வேதாந்தத்த்சாவவத்தைக்கட்டளைச்

சுருக்க - முற்றும்.



எட்டாவது.

## வேதாந்த்தசகாரியக்கட்டளை

நித்திய நைமித்திய காமியப்பிராச்சித்த
பாசனுநிகன்மங்களை யனேக ஜன்மாந்தரங்களி
லே வண்ணட்பட்டு கிருத கிருத்தியனுய்-நித்திய
நித்தியவத்து விவேகம்-இகமுத்திரார்த்தயலபோ
கவிராகம்-சமையாதிசட்கம்-முமூட்சத்துவம்
ன்கிறசாதன-சதுஷ்டய சம்பத்தியுடைய- அதி
வரபக்குவமுடையோர்-மேற் சென்ன மெடாதவ
கைக்கு-பிரம்ம கைவல்லியஞ் சமாதியிலிருந்
டைவதற்கு மேலான மார்க்கம் வேதமுடிவாகிய
உபநிடதத்தில்தெசகாரியமாகவிருக்கும்இதற்கு
தொகையெப்படியென்னில்-மாயாரூப மென்
ம்-மாயாதரிசனையென் றும் - மாயாசுத்தி யென்
றும்-சீவரூபமென்



சீவசுத்தியென்றும்-பிர்ம்மரூபமென்றும்-பிர்ம்
மதரிசனையென்றும் - தேககைவல்லியமென்றும் -
விதேககைவல்லியமென்றும்-ஆகபத்து-இதுதொ
கையாகியசிரவணம்-இதற்குவகையெப்படியென்
னில்-மாயாரூபமாவது-சர்வப்பிரபஞ்சங்களும் -
இத்தனை அங்கிசத்துடனேகூடி விளங்குமெனக்
காண்கை-மாயாதரிசனமாவது- அந்த அங்கிசத்
தில்-இத்தனையங்கிசம் - மாயாசம்பந்தமெனக்கா
ண்கை-மாயாசுத்தியாவது-அதினுடைய வதிட்டா
னத்தைக்காண்கை- சீவரூபமாவது-விளக்க - விள
ங்கப்பட்ட மாயாரூபத்தைக் காண்குதற்கோரறி
வுண்டெனக்காண்கை-சீவதெரிசனமாவது- அவ்வ
றிவைத் தானெனக்காண்கை- சீவசுத்தியாவது அ
வ்வறிவி னதிட்டானத்தைக்காண்கை-பிர்ம்மரூப
மாவது மாயாரூபத்துக்குஞ் சீவ் ரூபத்துக்கு
மதிட்டானம் பிரமமெனக்காண்கை-பிரமதெரிச
னமாவது-ஆரோபிதமு மதிட்டானத்தைவிட வே
றில்லாததுபோல மாயையுஞ்சீவனும் பிரமமாக
த்தானேகாண்கை-தேககைவல்லியமாவது- அந்த
ப்பிரமமாகத்தானே காண்கிறபோதமுநீங்கி ஆன
ந்தமயமாய் நிற்கை-விதேககைவல்லியமாவது-அ
ந்தப்பிரமானந்தாதீதத்தையடைகை - இதுவகை
ராகியமனனம்-இனிவிரிவெப்படியென்னில் - சத்
தாதி விடயத்திலவாவறத்து-ஒரேகாந்தத்திலிரு
ந்து ... யைப்பொருந்திசா

ட்சாத்கரிக்கும்வகை-மாயாரூபமாவது இதுவென்
றுகாணப்பட்ட சர்வபிரபஞ்சமுமுண்டாய் விள
ங்கிரம்மியமாய்நாமரூபமாய்இவைஐந்தங்கிசத்து
டனே விளங்குதலைக்காண்கை - மாயாதரிசனையா
வது-அந்த ஐந்தங்கிசத்தில்-பின்பு சொல்லப் பட்
ட நாமரூபமாகிய விரண்டங்கிசமு மாயையென
க்காண்கை-இனி மாயாசுத்தியாவது-இந்த மாயா
சம்பந்தமாகிய-நாமரூபத்துக்குமுன் சொல்லப்
பட்ட உண்டாய்விளங்கி இரம்மியமாகிய மூன்ற
ங்கிசத்தையுடைய அதிட்டானத்தைக் காண்கை-சி
வ ரூபமாவது-ஐந்தங்கிசத்துடனேவிளங்கப்பட்
ட சர்வத்தையுநோக்கி அவையில் பின்புசொல்லி
ப்பட்ட-இரண்டங்கிசமு மாயாசம்பந்த மென்று
ம்-அந்தமாயாசம்பந்தமுன்பு சொரூப சம்பந்த
மாகிய-சச்சிதானந்தத்தைவிட வேறின்மையென்
றுங் கலைடவறிவொன் றுண்டெனக்காண்கை-சிவ
தரிசனையாவது-நாமரூபமயமாகியகேவலமுநீங்கி
ச் சச்சிதானந்தமாகிய-பிரமத்தைப் பற்றிநிற்கை
இது சாக்கிர அவத்தை-சிவசுத்தியாவது-அந்தச்ச
ச்சிதானந்தமயமாகிய பிரமத்தை அவ்வொளியே
கண்ணாகக்கொண்டறிந்து அதிற்சிவத்துவபோதமட
ங்கி அச்சிவனுக்கு அதிட்டானமாகிய - பிரமந்தா
னாய்நிற்கை-பிரமரூபமாவது-மாயா ரூபமாகிய
நாமரூபத்திற்கும்-அதையுணருஞ்சிவனுக்கு மதி
ட்டானமாய் விளங்கப்பட்டது-சச்சிதா-னந்தமே



யெனக்காண்கை-இது சொற்பனவவத்தை - பிரம
தரிசனையாவது - பழுதை-கிளிஞ்சில் - கட்டை-சூ
ரியன்-தங்கம்-மண்-முதலிய எந்தவதிட்டானங்களி
ல் கற்பிக்கப்பட்டபாம்பு-வெள்ளி-கள்வன்-கான
னீர்-ஆபரணம்-கடகலசமுதலிவ் வாரோபிதம் வி
சாரித்தவிடத்தில்-அவ்வதிட்டான மேயாய் விளங்
குதல்போல ஆரோபிதமாய் விளங்கப்படுகிறநாம
ரூபமயமாகியமாயையும்அம்மாயையையறியப்ப
டாநின்றசீவனும்-அதைவிளக்கப்பட்டபரமும்—
நாமரூபமுமறியப்பட்டதானும்அறிவிக்கப்பட்ட
பரமேயெனக்காட்டாமல் நாமரூபத்தையுந் தன்
னையும்வேறுபோல் விளங்கப்பட்டஅஞ்ஞானமும்
அதற்கு நியதமாகிய கர்மமும் இந்த ஐந்துபதா
ர்த்தமும் அதிட்டானமாகிய சச்சிதானந்த சொரூ
பமே யாய்க்காண்கை-இதுசுழுத்தி-தேக கைவல்
லியமாவது-அப்படிஅந்த ஐந்து பதார்த்தமுஞ்
சொரூபமேயாய்க் காணப்பட்ட வாதனையு நீக்கி
அவ்விடத்திற்பிரகாசிக்கப்பட்ட சொரூபானந்தத்
தைப் பெற்றுநிற்கை-இது துரியம்-விதேககைவல்
லியமாவது அந்தசொரூபானந்தத்தைப்பெற்றுஆ
னந்தாதீதனாய்-வாக்குமனாதீத கோசரமாகிய பிர
மகைவல்லியத்தைப்பெறுகை-இது துரியாதீதம்-
இவ்வொழுங்கில் குருகாருண்ணியத்தினாலே சென்
று தசகாரியமு மனுபவப்பட்டு பிரமகைவல்லிய
மடையில்-அப்போது பந்தமுத்தி விவகாரஞ்சொ

ற்பனம் போலக்கண்டு பன்னடைப்படியாய்நின்று மேற் சென்னத்துக்கு வித்தாகிய ஆசைபயமிரண்டும். தான் சர்வானந்தத்திற்கு மதிட்டான மாகிய பிரம்மானந்த மயமாகையால்-ஆசையும்; தற்சொரூபமாகிய பிரம்மத்தைத்தவிர பிரத்தியக்ஷ வேறொன்றுமில்லாததாகையால் பயமுமொழியும்.

வேதாந்தசகாரியக்கட்டளை-முற்றும்.

---

# ஒன்பதாவது,

# வேதநெறியகவல்.

சாதன நான்குந் தன்னிடத்துதித்த *
பின்னர்விசாரம்பேதமபேதம் *
எனவிரண்டவையுள்ளீ சனுமுயிரும் *
இருமுதலென்றேபியம்புதறிரிவு *
ஒருமுதலென்றலொள்ளியகாட்சி *
ஆகையின்வேதத்தந்தவிசாரம் *
செய்திடவேண்டுஞ்சிறப்பெனிலாகமம்,
ஆன ...துசிறப்பாமத்தியான்மீகம் *
சொல்லிய...



இத்தகவன்றியெழில்லார்சுருதி *
அரசனாணையினவைமற்றெல்லாம் *
மற்றொருருணையின்மறையினைப்பற்றி *
நிற்குமதன்றிதிமலன்சுவாசம் *
வேதமாகமம்விளங்கியவாக்காம் *
விதனுன்மூர்த்தியதருமமறையாகும் *
இதற்கதிகாரமின்றியவைசியர் *
சூத்திராதிசொல்லியபேர்க்கும் *
விசாரணைபின்னைவிளங்கிடலாகும். *
அவரவர்சரிதையவரவர்க்கேயாம் *
பத்தியுஞானமும்பகர்வயிராகமும் *
எக்குலத்தோர்க்குமெய்திடலாகும் *
அறிவேகுலமென்றறைந்திடுமுலகம் *
நற்குலம்விணையினண்ணினதாகும் *
மூன்றுகடனுமுன்முடித்தோர்க்கே *
ஞானவிசாரணை நாடிமேற்கொள்ளும் *
நாமாரிந்தநானுவிதமார் *
பிரபஞ்சத்தின்பிறப்பிடந்தானே *
தெவரிணையுடையதெமக்கிப்பிறவி *
எய்தினதெந்தவேதுவினிஃதும் *
இறந்திடுமெந்தவேதுவினென்றும் *
தேர்ந்திடவேண்டுந்தேகாந்திரியாதி *
நாமலசித்தேநமதுருவகிலம்
பழுதையையிரவிற்பாம்பெனபதுவின்
...

சகமெனத்தோன்றுஞ்சங்கற்பத்தில் *
பழுதையினுளதாய்ப்பகர்ந்திடும்வடிவே
ஆரோபிதமாமரவிற்றங்கலில் *
அச்சிவவடிவேயகிலந்தங்குஞ் *
சகப்பொருளெல்லாஞ்சத்துச்சித்தின்ப
வடிவநாமமுமிவ்வகையைந்தியல்பில் *
உதித்திடுமுன்னமுறைத்திடுமொன்றும் *
சொரூபசம்பந்தஞ் சொல்லும்பினிரண்டும்,
மாயைசம்பந்தமற்றிவைதன்னை ... *
யூகித்துணராதுணர்வுடைத்தாகித் ... *
தோன்றிடும்பொருள் துவக்கிற்பிறவி *
சிதைந்திடுஞ்சகலத்தியாகந்தன்னில் *
சகலத்தியாகந்தானெதுவென்னில் .. *
பாம்பெனனீக்கிப்பழுதையென்றறிதல்
போலநாமாதிபோக்கிச்சொரூபம். *
பெற்றிடலஃதெப்பெற்றியிலுண்டாம்
அரவெனும்பிராந்தியகன்றிடுந்தீபம் *
வந்துவிளக்கில்வகையதுபோல ....... *
ஆசானருளிலருமறையந்த.......... *
ஞானவிசாரமேஞானதீபமுமாம்... *
அவ்விளக்கங்கொண்டறிந்திடவேண்டும்
அதிட்டானந்தோன்றிலாரோபிதப்போம்
தனையாரொன்றேதான்முதற்றேரின ... *
துளபடியுணரினெருங்கேயனைத்தும். *
தோன்றிடும்பழுதைதோன்றினவுடனே



கட்செவியென்றல்காணுதஃதின் ... *
அகிலமுநீங்கலன்றியேதோன்றில் *
பேய்த்தேர்போலப்பிரவர்த்தகமும் *
கனவதுபோலக்காண்டிடுமவையாய் *
நின்றிடலொருவிநித்திரைதன்னில் *
கண்டிடுங்கனவிற்காட்சிபோதென்று *
தனைவேறாகத்தானுணர்ந்திடலின் *
உடன்முதற்றள்ளியொருசிவநாமென்,
றிருளகன்றுறுதியிதையத்துதித்துக் *
கந்தர்ப்பநகரங்கண்டிடலிற்சகம் *
கண்டிவ்வுறுதிகலக்கமில்லாமல் *
நிற்றல்சமாதிநிலையிதுவாகும் *
உடலந்தத்திலொன்றுவன்முத்தி *
இதுநின்மலமுடையிதையருக்காகும்-
மலினநெஞ்சுடையமகற்குழன்றுறு *
விதமாமசுத்தம்விலக்கும்பொருட்டுச்
சுத்தவாதனையைத்தொடங்கி *
மனோலயஞ்செய்யின்வாய்த்திடும்வீடே.

வேதநெறியகவல்-முற்றும்.

---

# பத்தாவது.

## சகசநிட்டை.

சவிகற்பநிருவிகற்பத்தகநிட்டையெனவுணாக்கும்
இவிகற்பமென்றுமின்றியிடைவிடாச்சகசநிட்டை
செவியதினெனக்குநீயுந்திருவுளஞ் செய்யவேண்
டும், அவியமில்விருத்தவெற்பிலம்மையேயன்பர்
வாழ்வே. (௧)

பொதுவுறத்தருமம்பண்ணிப் புகல்வினைச் சமம
தாகி—அதுவிதுவென்னுஞ்சித்தமமலமாயநித்த
நித்தம்—இதுவெனவுணர்ந்தநித்தத் திகபரத்திச்
சையற்ற—சதுர்க்கிடத்திற்பாசந்தகர்ந்திடும்பத்
திநீதான்றும். (௨)

பத்திதான்பதிந்தகாலைப்பகரங்கத்தலமடைந்து *
சுத்தியாயங்கமந்தத்தொல்லருட்சத்தியாகி— நித்
தியானந்தலிங்கநேராய்த்தரிக்கப்பட்டுத்— நித்
தியாதின்றவின்பந்திருத்தியிற் களிக்குமென்றும்.

சமரசம்பதிந்தகாலைத்தலமயிக்கியத்தடைந்திங்—
கமரங்கமானவான்மாவந்தச்சிற்சத்தியாகி— விம
லமாலிங்கந்தன்னை விளங்குநெஞ்சினிற்றரித்து—
நிமலமாம்பரமானந்தநிசதிருத்தியிற்களிக்கும்(௪



ன்ந்தத்தங்கமாகுமகபூராசத்தியாகித்— தானந்த
ப்பிரசாதத்தைத்தரித்துச்சோத்திரத்திலென்றும்
ஊனந்தமில்லாவின்ப வோசையிற் களிக்குமென்
றும். (௫)

அநுபவம்பதிந்தகாலையடைந்து நற் பிராணலிங்க
த்—தெனுமங்கவாயுதின்றங்கெழிலாதிசத்தியாகி
உனுஞ்சரலிங்கந்தன்னையொன்றுந்தொக்கினிற் ற
ரித்துப்—பனுமத்தப்பரமானந்தபரிசத்திற்களிக்
குமென்றும். (௬)

அவதானம்பதிந்தகாலை யடைந்தந்தப் பிரசாதத்
தை—இவனுனதேயுவங்கமிச்சைநற் சத்தியாகி—
நவமானசிவலிங்கத்தைநயனமற்றதிற் றரித்திங்—
குவமானமில்லாவின்ப வுருவினிற் களிக்குமென்
றும். (௭)

நயிட்டிகம்பதிந்தகாலைநன்மயேசாத்தலமைந்து *
சயித்தியசலமாமங்கந்தகுருஞானசத்தியாகி—விர
ப்புறுங்குருலிங்கத்தைமேவுநாவினிற்றரித்திங்குப
ப்பெறுபரமானந்த வுருசியிற் களிக்குமென்றும்.

சற்பத்திபதிந்தகாலைத்தகும்பத்தலமடைந்து
பூர்ப்பகர்தனையாமங்கமெய்யதாங்கிரியையாகித்
தற்பராசாரலிங்கந்தரித்துநாசியினிலந்தச்— சிற்
பரானந்தகந்தந்தேர்ந்ததிற்களிக்குமென்றும்(௯)

ஒருபத்திதானேயாருமொருதலந்தானேயாரும்

ஒருலிங்கந்தானேயாருயொருமுகந்தானேயாருய்
ஒருவின்பந் தானேயாரு யொன்றதாய்க் களிக்கு
மென்றும். (௯)

அனுதியிற்சிவமேலிங்கமபினையே யங்கமாகும்—
அனுதியவ்வபினையேயிவ்வங்கமதாயிற்றென்றால்—
அனுதியச்சிவமேயந்தவங்கத்திற் புறம்புந் தோன்
றும்—அனுதியக்குருவத்தீக்ஷைக்கருத்தமு மிவை
யேயாகும். (௰)

சகசநிட்டை-முற்றும்.

---

பதினோராவது,

# பிரமசித்தியகவல்.

---

எழுவகைப்பிறப்பிலெடுத்தற்கரிய *
மானிடப்பிறவிவாய்ப்பினிலொருவற்;
காயிடினதுகொண்டம்முத்திபினை,, *
அடைகுதலேபயனஃதினையன்றிச் *
சித்திபுத்திகளிற்சிந்தனைசெய்யின் *
ஏநமதாகுமெனிறலெனில் *
உலகத்தின்கண்ணெப்பிலொருவன் *
அன்புகிடைத்தாலவனாகிய *
பட்டன்பெறுகுதலேபழுதிற்சிறப்பும் *



அஃதினைப்போலவவனியின்மனிதப் *
பிறப்பினைக்கொண்டேபிறவாநெறியை
அடைந்திடுமதற்கரிதற்கரிய *
அவதியியல்பென்றறிந்துளபோதே *
எத்தனம்பண்ணுதிருப்பவன்றனக்குந்,
தான்வஞ்சகனெனச்சாற்றலுமாகும் *
இத்தகவாகினியம்பிடுசித்தி *
அடைந்திடுகுதல்பயனலவோவென்னில்
அனந்தசித்தியடைந்திடுமதற்குள் *
பிரமசித்திபெறுகுதலேபயன் *
அணிமாதிசித்தியடைகுதல்பயனன் *
றிஃதையுமன்றியியம்பிடுமட்ட *
யோகந்தானுமொள்ளியபிரம *
சித்திக்கங்கஞ்செப்பியவவ்வயின் *
கருத்தறியாதுகருதிமாறுக *
அனுட்டித்தேயவ்வணிமாதிதன்னைப் *
பெறுவர்கருத்தைப்பேசக்கேண்மின்
காமாதிகளைக்கைவிடலியமம் *
விட்டபொருள்கண்மேவிடிற்றள்ளி *
நிற்குதனியமநிருபாதிகமாய் *
ஓராதனத்திலுறைகுதலாதனம் *
நாமரூபத்தைநாடுமனத்தை *
இருதயமதனிலிருக்கப்புகுத்தல் *
பிராணாயாமம்புறவிடயத்தைப் *
பொருத்தலேமீட்டல்பிரத்தியாகாரம்

விடப்பவாதனையை விகற்பறநிறுத்தல் *
தாரணையாகுந்தற்சொரூபத்தை *
நாடறியானநவிற்றிடுபுறமும் *
உள்ளுமறவவ்வொளிதானேயாய் *
ஒத்துநின்றிடலேயோக்கியசமாதி *
ஆதலினிந்தவட்டயோகமதும் *
பிரமசித்திபெறுதற்கங்கம் *
என்னலுமாகுமினிப்புத்தியதும் *
பயனல்லவோவெனிற்பகர்ந்திடுபுத்தி *
இடம்பொருளுறவுவின்பங்கீர்த்தி *
என்றைவிதமாமிவ்வையைந்தினையும் *
நன்றாய்த்தேரினன்றுத்தியதாம் *
இஃதினையன்றியபிம்மாயாவித *
சம்பந்தந்தனைத்தானினைந்திடுதல் *
அறியாமையாகு மஃதினைக்கேண்மின்
இடமுமழியாவிடமேயிடமாம் *
பொருளுமழியாப்பொருளேபொருளாம் *
உறவுநீங்காவுறவேயுறவாம் *
சுகநிரதிசயசுகமேசுகமாம் *
புகழும்பெரியோர்புகழ்தலேபுகழாம்
ஆகையிற்புத்தியாகியவிதங்கள் *
எழிலார்வீடேயிவ்வகையன்றி *
மாயையிலுளதாய்வந்திடுசித்தி *
புத்திகளென்னப்புகலிரண்டினையும் *
அடைந்திடநினைத்தலபலமதாகும் *



[illegible]திருவென்னிலியம்பிடுமாயா *
சம்பந்தத்தைதானடைகுதற்கும் *
சத்தியமுத்திசம்பந்தத்தை *
அடைந்திடுமதற்குமாகியவருத்தம் *
எட்டுணையானுமிச்சையச்சங்கள் *
உள்ளின்றியேவிட்டொன்றியகாயக் *
கிலேசம்பண்ணிக்கிளர்தவமதனில் *
அடைந்திடவேண்டுமாகியவிந்த *
இரண்டுவகைக்குமேற்றமுந் தாழ்வும்
இன்றிவருத்தமெய்தல்சமமாம் *
இத்தகைவருத்தமெய்தப்பட்டும் *
அனித்தப்பொருளை யடைகுதலபலம்
அழியாப்பொருளையடைகுதசபலம் *
அன்றியுநன்றாயறிந்தவிடத்தில் *
அவைகளிரண்டுமசத்தாதலினால் *
இன்பமோர்காலுமிலையவைதன்னின் *
நடைந்திடுமின்பமலையாவறிவின் *
ஆனந்தலேசமஃதறியாமையில் *
இவைகளினிடமாயெய்திவந்ததுபோல்
அறிந்திடுமதனாலறிவானந்தம் *
பொருந்திடிற்சகலபுத்திசித்திகளும் *
எக்காலத்திலெய்தினதாகும் *
இதுவன்றிவேதமொழிலாகமத்தும் *
புருடார்த்தமாகப்புகலுங்கினிலும் *
சிவமடைகுதலேசிறப்பெனவோதும *

அச்சிவமென்னுமழகியவீட்டை *
ஐயந்திரிவுமறவேயடைதல் *
எம்மார்க்கத்தாலென்றிடில்வேத *
முடிவினின்மொழியுமொய்ந்நெறியதனில்
அடைந்திடவேயெம்மார்க்கத்தின் *
ஒழுங்கைக்கேண்மினுபநிடமதனில் *
ஏகமேவாவத்துவிதீயம் *
பிரமமேயென்றுபேசிடுமதற்குச் *
சுசாதிவிசாதிசுவகதபேதம் *
சொல்லியமூன்றுஞ்சொரூபத்தின்மை
என்றதுவாகினெழில்வேதாந்தப் *
பக்கந்தனக்குப்பகர்ந்திடும்பந்தம் *
வீடிவையிரண்டின்விவகாரத்துணி *
வெத்தனையென்னிலியம்பிடக்கேண்மின்
நித்தியமாகையினிகழ்ந்திடுகால *
பரிச்சேதமதும்பரிபூரணத்துவம் *
ஆகையிற்றேசவரைபரிச்சேதமும் *
ஏகமதாகினியம்பிடுவத்து *
பரிச்சேதமதும்பகர்ந்திடவொண்ணா
தறிவாய்ச்சத்தாயானந்தமதாய்ப் *
பந்தமுத்தியெனப்பகர்விவகார *
அதீதமாகியவைவறவிளங்கும் *
தன்னிடந்தனிலேசங்கற்பசத்தி *
சங்கற்பமல்லாதசங்கற்பசத்தி *



சத்தியேதென்னிற்சாற்றிடக்கேண்மின்
நினைவுருபமதாநிகழ்ந்திடுமதற்கு *
வடிவேதென்னில்வகுத்திடுநாமம் *
உருவமயமேயோரோரிடத்தில் *
ஒருவன்கூவுமுளாயதுதானே *
எதிரிட்டிப்படியெழுவதுபோல *
நினைவதுவென்றுநிகழ்ந்திடுநாமம் *
உருவதுவென்றுமொருபேதமுமில் *
நவிற்றிடுரூபநாமமயமும் *
மாயாமயமேமாயையென்றதுதான் *
யாதொன்றில்லாததுமாயையாகும் *
உள்ளதுமலவாயுருப்பெயர்மயமாய் *
நினைவுருபமதாய்நிகழ்சங்கற்ப *
சத்திசத்தாயதற்சொரூபமதாமே *
அதிட்டானத்திலாரோபிதமாம் *
ஆரோபிதமுமதிட்டானமின்றி
விளக்காததுபோல்விளக்கிடுந்தன்னைத் *
தவிரச்சங்கற்பசத்தியுந்தோன்று *
நித்தகைதோன்றுமிருஞ்சங்கற்ப *
சத்திமயமாஞ்சருவங்களையும் *
சத்தாய்நிகழுந்தற்சொரூபத்தில் *
ஆரோபிதமென்றறிந்தமையாது
புறம்பெனச்சத்தியபுத்தியைப்பண்ணிப்
பார்த்திடுமிடத்தில்பாருயிர்செகமென்

றணைத்திடப்பட்டவோருருப்பொருளும்
விளங்கிடுமவைவிளம்பிடக்கேண்மின்
சங்கற்பசத்திதன்மயமான *
நாமரூபமதேநாட்டிடுசெகமாம் *
அவையினைநோக்குமறிவேயுயிராம் *
அவ்வயினைவிளக்குமறிவேபரமாம் *
இத்தகையாகவியம்புமுப்பொருளும் *
உதித்திடுமிந்தவுயிர்பரமிரண்டில் *
மேற்பரஞ்சர்வவிடயமதாகும் *
சீவனேகதேசவிடயம் *
இந்தச்சீவனிப்படிபொய்யாய்ச் *
சடமாய்த்தோன்றுஞ்சகத்தினுடைய *
புணர்ச்சியிற்சடமாய்ப்போதவடிவை.
விட்டுடனிச்சைவிளங்கிடுஞானக் *
கிரியையுடைத்தாய்க்கிளக்குமிவையில்
கன்மமுண்டாய்க்கன்மந்தன்னால் *
தோற்றமுடைத்தாய்த்தோன்றுதொட்டுச்
செனனமரணஞ்சென்றுடன்வரும் *
இத்தகைபுரியுயிர்சங்கற்ப *
சத்தியேபந்தந்தருஞ்சங்கற்ப *
சத்தியின்வடிவினிற்சாற்றக்கேண்மின்
பிராந்தியிலொருவன்பிரசிமாருகத் *
திக்குசடலீனத்தேருமிடத்தில் *
சூரியனின்றுதோற்றியதிசையைக் *



கண்டுந்துணிவாய்க்காண்குதல்கூடா *
தையமாய்த்தோன்றுமடுத்தபிராந்தி *
உண்ணின்றுநீங்கிலுள்ளபடியே *
துணிவாய்நேரேதோற்றுமதன்றி *
மந்தவிருளின்மறைந்திடுகயிற்றைப் *
பாம்புபோலப்பார்த்திடுமிடத்தில் *
பாம்பலவென்றும்பழுதையேயென்றும்
ஆறதனாலேயறிந்திடுபோதும் *
துணிவதுவாகத்தோன்றாதந்த *
மந்தாந்தகாரமாறிடிற்றோன்றும் *
அஃதினைப்போலவறிந்திடுசாத்திர *
ஜென்னியஞானஞ்செப்புதலின்றி *
கிருதகிருத்தியனாய்க்கிளர்சாதனங்கள் *
நான்குமுடைத்தாய்ஞானசூரியர் *
அருளாதினாலேயாரணமுடிவாம் *
மாவாக்கியத்தின்வகுத்திடுபொருளை *
விருப்பமதுடனேவிசாரணைபண்ணி *
இச்செகஜீவவிருபரம்மவைக் *
கதிட்டானமாகியவப்பிரசொரூபம் *
தானேயென்றுதன்னுள்ளிருளை *
பகன்றுசமாதியென்றறைந்திடுகின்ற *
சமாதானபுத்திதானதுபிறந்து *
தினதுசங்கற்பசத்தியினாலே *
ஆரோபிதமாயனேகத்திவங்கள் *

விளங்கினதென்றும்விளங்கிடுமிவைக்கதிட்
டானந்தானேயாமெனவென்றும் *
பழுதையினிடத்திற்பாம்பொருகாலும்
இல்லாததஃதிவ்வாரோபிதம் *
இலையெனநீங்கியெழிலதிட்டானம் *
ஆய்நிற்குதலேயசங்கற்பசத்தி *
இதுவேமுத்தியிச்சங்கற்பம் *
அசங்கற்பமென்னவறைந்திடுமிவைக் *
கதீதனேதானாகையிலவையின் *
ஊதாம்பந்தமோங்கியமுத்தி *
இவைதனக்கதீதனென்னனுமாகும் *
இத்தகையொருவனெழிற்குருவருளில்
ஐயந்திரிவறவறிந்துசொபரும் *
தன்னுடன்சன்னிதானமதனில் *
சங்கற்பத்திற்றோனுவாய் *
விரிந்ததுவென்றும்விரிந்திடுமெவையும்
அசங்கற்பத்திலடங்கிடுமென்றும் *
இவையேபந்தமெழில்வீடென்றும் *
இவைகளிரண்டுமென்கனோர்காலும் *
இலையிவைவிளங்கலெம்மிடமதனில் *
ஆரோபிதமென்றறிந்தவறிவு *
கலக்கமில்லாமற்காத்திரநீங்கும் *
தன்னளவதனந்தயிலதானாயினில் *
தில்திடின்முடிவினிகழ்பந்தமுத்திக் *



கதீதமதாகுமழியப்பிரம *
சித்தியதனைச்சேருவனே. *

பிரமசித்தியகவல் - முற்றிற்று.

---

பனிரண்டாவது.

# உபதேசசித்தாந்தக்
# கட்டளை.

---

ஆத்மாக்களை முத்தியிலே விடவேண்டி வாக்குமனதீத கோசரமாகிய அருட்சத்தி தானே - பாசவயிராகஞ் - சிவகாருண்ணியம் - ஈஸ்வரபக்தி - பிரமஞானமென்கின்ற - நான்குமேயொருதிருமேனியெனக்கொண்டருளிய - ஞானாசாரியர் இனிப் பிறவாதமுடிந்த பிறப்பில் நித்தியாநித்தியவத்து விவேகம் - இகமூத்தார்த்தபலபோகவிராகம் - சமையாதி சட்கம் - முமூட்சத்துவமென்கின்ற சாதன சதுஷ்டயசம்பத்தியே - ஓர்வடிவெனக்கொண்ட - சற்சீடனுக்கு - அனுக்கிரகம் பண்ணுமுறைமை - உலகத்தின் கண்ணே வயித்தியராயினோர் - ஒருவனது வியாதியை - நிச்சயம்பண்ணி யித்தனைதினத்தின்மேல் -

அவுடதங்கொடுக்க வேணுமென்று நியமமிருப்பி
னும்-ஒரோர் அசாத்தியவியாதியை யுடையவனுக்
குக் கண்டவக்கணமே-கனமாகியபூபதி முதலிய-
அவுடதங்களைக் கொடுத்து உடனே திருப்பவே
ண்டும். அதைப்போலச் சாதனங்களை யுடைய
தீவரதரபக்குவனுக்கும் ஓராண்டாகிலுஞ் சோதித்
து - அநுக்கிரகம்பண்ணவேணுமென்றாலும் - ஒ
ரோர் அதிதீவரதரபக்குவனுக்கு. அந்தக் கணமே
இந்த உபதேசசித்தாந்தத்தை அநுக்கிரகம் பண்
ணி பவரோகத்தையுடனே நிவிர்த்திபண்ணவேண்
டும்-இந்த உபதேச சித்தாந்தமார்க்கத்தியொழிந்
தமற்றையமார்க்கத்தினாலே பவரோக நீங்காதோ
வென்னில்-பாதாதிகேசபரியந்தம்-அக்கினி பற்றிக்
கொண்டவனுக்கு விழுந்த துறையிலே அவனை வி
ழுங்கி மேலிட்டப்பட்டமடுவினையன்றிக் கொஞ்சம்
ஜலத்தில் பிரவேசிக்கில் உடனேயவிந்து முடியா
து-அதைப்போல அதிதபக்குவனுக் குடனே-அவ
னையும்விழுங்கி மேலிடப்பட்ட அகண்டாகார ஞா
னம்-இம்மார்க்கத்திலே பிரவேசித்த- அக்கணமே
யுண்டாம் (அதெப்படியென்னில்) சற்குருசன்னி
தியிலே சற்சீடனானவன்-தேனிரம்பிய மலரைத்தே
டும் அளிகள்போல பூதலமெங்குந்தேடி வெப்பற்
றிராமல் வந்தடைந்தகன்ற அக்கணமே-உள்ளம
கிழ்ச்சியையடைந்து தாரகமாகிய சிவமே யெனக்



கண்டு-அவருடைய-அருள்சுரக்கும்படி பண்ணிக்
கொண்டு (சுவாமீ) நானோர் இந்தநானாவாகிய வுலக
மேது-இது ஆரையுடையது - எனக்குச்சனனமர
ணம் வந்தவாறேது-இது யாதினாலேநீங்கும்-இவற்
றையநுக்கிரகஞ் செய்யவேண்டும்-இவையிற்பிரக
மத்தில்-அடியேனானொன்று விண்ணப்பஞ் செய்
தபடிக்கு என்னையறிவித்தால் - மற்றையநாலும்அ
டியேனே விண்ணப்பஞ்செய்வேனென்று சற்சீட
ன் நானொன்றுகேட்க-ஆசாரியரநுக்கிரகம் பண்
ணுகிறார், நல்லது, உன்னைக் கரதலாமலகம் போ
லக்காட்டுகிறோம், நீநன்றாகப் பார்க்கக்கடவாயெ
ன்று திருவடியைச்சூட்டி-அஸ்தமத்தக சையோ
கம்பண்ணி கிருபாதிருஷ்டியினாலே நோக்கி-இங்
கேயுண்டாய் விளங்குவதெல்லாம்-நீயேயென்னில்
(சுவாமீ) இங்கேயுண்டாய் விளங்குவதெல்லாம்நா
னெப்படியாவேன் ஆனாலுனக்கிங்கேன்ன பிரமா
ணம் ... ... சுவாமீ ... ... உ
லகமேதோன்றது ஆனாலந்தவுலகமெவ்விடத்தினி
ன்றுதோன்றுதென்னில்(சுவாமீஎன்னுடைய நினை
விலேநின்றுதோன்றுது-ஆனால் நினைவுவேறுஉலக
ம்வேறோவென்னில்-(சுவாமீ)உலகமெதிரிட்டுக்கா
ண்கையினாலேவேறுதானே- ஆனால்உலகமாகியநா
மரூபத்தைநீக்கிநினைவைப்பாரென்னில்- (சுவாமீ)
அப்படிபார்க்குமிடத்தில் நினைவைக்காணேன்- ஆ

னால்நினைவைநோக்கிநாமரூபத்தைப்பாரென்னில் (சுவாமீ) அப்படிபார்க்குமிடத்தும்நாமரூபத்தைக்காணேன் ஆனால் - நாமரூபமயமாகியவுலகமேதென்னில் (சுவாமீ) யென்னுடையநினைவுதானே - ஆனால்அந்நினைவுஎங்கேநின்றுதோன்றுதென்னில் (சுவாமீ) என்னிடத்திலேநின்றுதோன்றுது - ஆனால்நினைவுவேறுநீவேறோவென்னில் - (சுவாமீ) என்னினைவாகையினாலே - வேறின்றிநான்றானே - ஆனால் நினைவைநீக்கியுன்னைப்பாரென்னில் - (சுவாமீ) யான் பிரகாசியாநிற்கின்றேன் ஆனால்நினைவு - நீயெப்படியாவாயென்னில் - (சுவாமீ) நினைவுஎன்னைவிடவேறுதானே - ஆனால்உன்னைப்பிரித்துநினைவைப்பாரென்னில் - (சுவாமீ) அப்படிபார்க்குமிடத்தில்நினைவைக்காணேன் - ஆனால்நினைவுயாதோவென்னில் - (சுவாமீ) நினைவானதுநானுமல்லஎன்னைவிடவேறுமல்ல: ஆனால்அதெப்படியென்னில் - (சுவாமீ) தங்கத்தினிடத்திலேபணிதியானதுதங்கமுமல்லாமல்தங்கத்தைவிட வேறுமல்லாமல்கற்பிக்கப் பட்டதுபோலநினைவுமென்னிடத்திலேகற்பிதம் - ஆனாலிந்தநினைவுவேறேசத்தையோவென்னில் - (சுவாமீ) அதற்குவேறேசத்தையில்லை - என்னுடையசத்தையேதோன்றிவிளங்காநிற்குது - ஆனாலிங்கேதோன்றுவதெல்லாம் - யாதென்னில் - (சுவாமீ) இங்கேதோன்றிவிளங்குவதெல்லாம்நானே - ஆனால் நா



முன்னம் - எல்லாநீயேயென்றுசொன்னோமே - அதற்குனக்குஐயந்தோன்றிற்றே - இப்போதுஎல்லாநானேயென்றுநீசொன்னதுதிரிவோநன்றாய்ப்பாரென்னில் (சுவாமீ) முதற்றிரிவினாலேஎல்லாம்நானெப்படியாவனென்றுகேட்டேன் - (சுவாமீ) கடாக்ஷத்தினாலே - திரிவுபண்ணிக்கொண்டிருந்தஅஞ்ஞானவிருள்போய்த்துணிவாகத்தானே - எல்லாநானேயெனக்கண்டேன் - ஆனால்உன்னைக்கண்டவிடத்தில்அநுபவமெப்படியிருந்ததென்னில் (சுவாமீ) அகண்டாகாரமயமாய்ச் - சுட்டிறந்தசுகாதீதமாய்ப்பழுதையினிடத்திற்பாம்பொருக்காலுமில்லாததுபோல் - உலகமுயிர்பரமென்பது - ஒருக்காலுமில்லாததாய்ப்பிரகாசியாநிற்குது - ஆனாலிதுவே தற்சொரூபமுத்தி - இதிற்கலக்கமில்லாமல் - தேகபதனபரியந்தம்நிற்பாயாக - இதன்றிஅந்தமுத்தி நீயானத்துக்குக்குறி - மற்றைநாலும் - நீயுன்னனுபவப்படிக்குச்சொல்லென்னில் - (சுவாமீ) நாலுவிதமாகியபிரபஞ்சம்என்னிடத்திலேஆரோபிதம் - அதுசங்கற்பத்தையுடையது - அந்தச்சங்கற்பத்தையுடையஆரோபிதமாகியபிரபஞ்சம் - அதிட்டானமாகியஎன்னைவிடவேறல்லவென்று காணாததிரிவினாலே எனக்குச்சனனமரணம் - எல்லாநானேயென்றறியில்செனனமரணமில்லை - இப்படிமற்றைநாலும்சுவாமிகடாக்ஷத்தினாலேயெனக்குஅநுபவமாச்சுது - நல்லது

தம்முடைய அனுபவமுமிதுவே சுருதியி னுடைய
முடிவிலேசொல்லுவதுமிதுவே-உன்னுடையவனு
பவமுமிப்படியேயாகில் இதுவே-உபதேசசித்தாந்
தம்-என்று இதிற்சலக்கமில்லாமல்வாழ்வாயாக வெ
ன்றுஆசீர்வாதம்பண்ணினார்.

உபதேசசித்தாந்தக்கட்டளை

முற்றும்.

---

## பதின்மூன்றாவது.

# சிவதரிசனஅகவல்.

உரோமசமுனிகளுண்மகிழ்ச்சியுடன்
பணிந்திடுகின்றபழங்கிரிமேய
விருத்தவம்பிகையேவிண்ணப்பமொன்றுண்
டொக்கேன்யானுமுன்செவிசாத்தி
அருள்செயவேண்டுமறைநீயென்னில்
கடையனேனென்றனக்குங்கருணைதாக
சுட்டிறந்தொளிருஞ்சுயம்பிரகாச
சிவதரிசனத்தைச்செப்பிட வேண்டும்
நல்லதுனக்குநாமேயகவிருள்



நீக்கிமுன்படியேநிலையினில்வைத்த
வகைப்படியேநீவகுத்திடாயென்னில்
இருளறநீக்கியிதுவறநோக்கில்
இவ்விடத்துண்டாயிலகுவதேசிவம்
விளம்புமச்சிவத்தைவிளங்குவதேநீ
நீவிளக்குஞ்சிவநின்றறிகுதல்யான்
இவ்வனுபவத்திலியம்பியனார்திரு
ஞானநேயம்மிவைநண்ணிநிற்கையினில்
சிவதெரிசனமெனச்செப்பிடலாகா
என்றெனில்யானுறையெழிலனுபவத்தில்
சிவம்நியானெனச்செப்பியமூன்றும்
உரைமாத்திரமவையொருமுதருனே
எப்படியோர்முதலென்றெனிற்சொல்கேன்
சச்சிதானந்தத்தன்மயஞ்சிவமெனச்
சாற்றுதல்போலுஞ்சாற்றுமோங்காரத்
தடங்கிநின்றிடுமூன்றக்கரம்போலும்
நீலோற்பலமெனநிகழ்த்திடில்போலும்
கடமடமகதாகாயமெனவே
சாற்றுதல்போலுஞ்சாற்றியவிவையில்
உரையேபின்னமுளபடிநோக்கில்
ஏகமேயாமித்தகைபோல
நானீசிவமெனநவிற்றிடுமூன்றும்
சொன்மாத்திரமேசொரூபமதொன்றே
ஒன்றேயாகிலுயிர்க்கிதுவதுவென்

றுரைத்திடப்பட்டவுருப்பெயர்மயமா
மாயைதோன் றும்வகையேதென்னில்,
அஞ்ஞானத்தாலச்சொரூபத்தை
மறந்துயிரிதுவெனுமாயையைக்காணும்
ஒருமுதலானவுயிர்க்கிஃதென்றால்
பரசிவமதற்கேபந்தமுண்டாகும்
மேலுமோர்சிவம்விளங்குதலிலையில்
ஒருகாலையினுமொருவாபந்தம்
என்றெனிலந்தவெழித்சொரூபற்குப்
பந்தமுத்திப்பகர்ந்திடலாகா
உன்னருளதனிலுபக்கிரமத்தை
அன்றெனக்குநீயருளியவகையே
சொல்கேனந்தச்சொரூபவெளியில்
கதிரொளிதோன் றுங்கானலேபோலப்
பேடசவொண்ணாதபின்றுசத்தி
தோன்றிடுமதனிற்சொரூபசிற்சத்தி
சாயைபதியிற்சகமுயிர்பரமென
ஓர்முப்பொருளுமுடனேவிளங்கும்
எத்தகையென்னிலியம்பியபின்னை
திரிகுணசமூகஞ்சேர்ந்துநிகழும்
சத்துவகுணத்திற்சாயையேபரம்
எண்ணசிறந்தவிராசதகுணத்தில்
சாயைசகமேயுயிர்தாமதமிருண்டாம்
இருண்மாயையெனவிருளுயிர்வையை



மறைத்தேநிற்குமாயைச்செகமாம்
தனுமுதலானசகமதுண்டாகக்
கணக்கறுவாகக்கள்மருநிகழும்
இத்தகைபின்னுவிருஞ்சத்திதன்னில்
ஐந்துபொருளுமன்றேநிகழும்
இதிற்பந்தமுத்தியிசைத்திடலாகும்
இராசதகுணத்திலிசைந்திடுசாயை
ஆகியவுயிர்களதிட்டானமான
தற்சொரூபத்தைத்தாமதவிருளால்
மறந்துமூவகையாய்மாயையிலுழலும்
சத்துவகுணபரந்தனக்கொருகாலும்
இருளேயில்லாவியற்கையிலருளில்
தனதங்கிசமுயிர்தானெனவறிந்து
கூபத்தில்வீழ்ந்தகுழந்தையெடுக்கத்
தாயேவீழ்ந்ததகமையின்பரமே
மாயைதனிலேவந்துருவைக்கொண்
டடந்துதொழிலுமடைவுடனடத்தி
இருளினைமாற்றியெழிலதிட்டான
தற்சொரூபத்தைத்தானடைவிக்கும்
இருளதுநீக்கியிருந்தவிடத்தில்
உயிர்பரமிரண்டுமுடனுயிர்போலப்
பின்னுசத்தியிற்பெற்றிடுமுத்தி
உயிர்பரமிரண்டுமொன்றேயாகி
அபின்னசத்தியிலடங்கிடுமுத்தி

அபின்னையைப்பார்த்தேயது நீயென்ன
அருமறையோதுமதுவறியாமல்
பின்னையைப்பார்த்தேபேதவாதிகள்
பாவனையென்றேபகுத்துரைசெய்வர்
உயிருஞ்சாட்சியொருநானேயாம்
பரத்தின்சாட்சிபரைநீயேயாம்
அப்பால்விளங்குமதுசிவமேயாம்
பின்னுஞ்சத்தியிற்பிறிவைக்குறித்தே
இவ்வகைமூன்றாகியப்புணாயன்றிப்
பார்த்துடனுக்கிற்பரம்பொருளொன்றே
இப்பரம்பொருளேபெறிற்சிவதரிசனம்
என்றேமுன்னனியம்பியதுமையே
சுட்டொடுநோக்கிற்றோன்றிடுமென்றாய்
சுட்டின்றிநேர்க்கிற்றோன்றிடுமொன்றாய்
மூன்றாமிறந்தமுப்பாழ்தனில்
தற்சிவசொரூபந்தானாய்விளங்கும்
பின்னுஞ்சத்தியிற்பிறந்ததுமூன்றும்
பின்னைதனிலேபெயர்ந்தேயொடுங்கும்
அப்பால்மௌனத்திழியசிவமே
அழகியசிவத்திலாரோபித்மாய்ப்
பின்னைநிகழ்ப்பெயராதென்றும்
அதிட்டானமானவச்சிவநேயம்
உலகமாய்த்தோன்றியுயிருமருளும்
[illegible]



உயிருமருளுமொருசிவமேயாம்.
இத்தகைகண்டேனெழிற்சிவதரிசனம்
சிவம்நமக்கருளியசிவதரிசனத்தின்
முடியேயுனக்குநம்பார்வையிலுண்டாய்
விளங்கிற்றன்னிலைவிட்டுநீங்காது
நில்லெனவருளினிமலநாயகியே
மலந்திணுநாயைவளப்பமதுடைய
சிங்காதனத்திற்சேர்த்துவைத்ததுபோல்
எனக்கேநகைவருமெனதுசரித்திரம்
எனக்குமிந்தவெழிற்சிவதரிசனம்
அளித்தனையிதற்கோரறைகைமாறென்
பரையேயுனக்கேபரங்காணென்னைக்
காத்தருகாத்தாய்கடைபோகக்கண்
பார்த்தெனைவிடாதுபரிந்துகொண்டருளே

சிவதரிசன அகவல்-முற்றும்.

பதினான்காவது.

## ஆகமநெறியகவல்.

சத்திநிபாதந்தான்பிறந்திதையம்
சுத்தமதடைந்துதொல்லைமூவுலகும்
கான்றசோரதனிற்கண்டெனவிடுத்து

வீட்டின்பினையேவிரும்பிடினாகம்
விசாரணைசெய்யவேண்டிடுமுத்தி
உண்மையின்மும்மூதுண்மைபதாகும்
அனைத்தையுமன்றியவணியிலோர்பொருள்
உணர்ந்திடுமிடத்திலுருவுடனுமம்
தோன்றுதன்முனமேதோன்றிடுஞ்சிவமதை
இருளினிற்றெரியாதிதுவெனச்சுட்டி
எய்திடுமாயையிருவினையதனின்
ஆகையிற்பதிபசுவாணவமாயை
கருமமுந்தோன்றுங்கருவிதிரேக்கின்
றும்முதலவையின்முத்தியிற்பசுவை
விடவேண்டுமென்னும்விருப்பமதனில்
இருவகையாகுமிரும்பதிபசுவும்
மூவகையாகுமும்மலந்தனின்மற்
றவைதனக்குக்குறியதுவிதுவாகும்
அதுவித்துநீங்கிலவைமூன்றகலும்
அவையினின்மூலமாணவமாகும்
அறுவைக்கழுக்கையகற்றிடுமூவரும்
சாணமும்போலச்சார்ந்தியவிரண்டு
மூலங்கெடுக்கமூலனேகூட்டி
உற்பவமுதலாயுளாத்திடுமைந்து
தொழிற்செய்திடுவன்றொன்மையிலேநின்
றந்தகன்கண்ணிலப்படலுந்தனை
னடுத்திடுமுனமதற்கேற்றவுடற்கவீ



சேர்த்திடனிதமாய்த்தீர்ந்திடுகாலம்
பொருந்துபோதும்புகன்றிடுமாயைப்
பிறப்பினுக்கஞ்சிப்பிறப்பைநோநீக்கும்
நெறியேதெனவந்நெறியினையுணர்ப்பார்
ஆனதேடியாற்றிடுகாலையின்
சிவமேஞானதேசிகனாகும்
அவனருளாலேயாகமநெறியின்
ஐந்துதொழிற்குமரனேயுரியன்
ஆமென்றுயிர்பொருளச்சார்பவையும்
உடற்காவலையுமொருங்கேநீக்கி
அருளினைநோக்கியாசானருளில்
உச்சியினிற்குழுவலம்போல
ஆணவமாயையவையினிற்றோன்றும்
மறப்புநினைப்புமாற்றிடல்புகல்
அற்றவீடென்றேயறைந்திடுமாகமம்
அவ்வீடதனினனுபவந்தன்னின்
பெத்தத்தினிற்கும்பெற்றியைப்போல
இதுவெனத்தோன்றுமெவையவையனை
நியதிசெய்ததுவாய்நிற்றல்சமாதி[த்தும்
சமாதியைநீங்கியசாக்கிரத்தனிலும்
சிவமேயைந்துசெய்கையினடித்தல்
கண்டுதற்செயலனைவிடவேண்டும்
இத்தகைநெறியையெய்திப்பாலன்
பித்தன்பசாசன்பெற்றகுணங்கள்

மருவியேநிற்றல்வாய்மைநெறியாம் *
தேசாந்தத்திற்சிவமேசேர்வன் *
இஃதாகமநெறியினியாரணநெறி *

ஆகமநெறியகவல்-முற்றும்.

——✻✻✻✻✻✻✻✻——

## பதினைந்தாவது.

# பிரமானுபவ அகவல்



நன்னெஞ்சேவாதானுரைக்கக்கேள் *
பிரமானுபவத்தைபிரத்தியக்கமதாய் *
அருட்குருவருளிலறைகுவன்கேளாய் *
யாதோர்பொருளும்யாவராயினும் *
சுருதியுத்தமதாய்ச்சொற்றிடவேண்டும்.
மனவுரையதனின்மதித்திடவொண்ணாச் *
சச்சிதாநந்தத்தற்சொரூபத்தில் *
சிறந்தசிற்சத்திசெகசத்தியென்றும் *
இருவகைச்சத்தியெனவன்றேயுள *
அவையினிற்பின்னையகிலத்துக்கேது *
சிற்சத்திமுத்திதானதற்கேது *
பரத்தினிலபினுபாவமாயொன்றாய் *



சிற்சத்திநிற்குஞ்செகசத்தியதும் *
தற்சொரூபத்தைத்தானதுவிடாமல் *
வேறுபோற்றோன்றி விளங்குமுக்குணமாய்
சாத்துவிதராசததாமதமெனவே *
சத்துவகுணத்திற்றுக்கியசாயை *
பரமாயெங்கும்பார்த்திடுமிராசத *
சாயையுயிராந்தாமதமிரண்டாம் *
இருண்மாயையெனவிருளுயிர்த்தடுக்கும் *
இருளினையிரியயிருமாயைசேர்க்கக் *
கணக்கதுவாகக்கருமமுண்டாகும் *
ஆகவைவிதமுமன்றேநிகழும் *
இவ்வைவிதமாயிலங்கியபின்னை *
பரத்தினையன்றிப்பார்த்திடிவில்லை *
சர்வவிடையதற்பரஞ்சுவாசம் *
சுருதியதாகுஞ்சொல்லாகமமாம் *
என்றெனவோதுமெழிலார்சுருதி *
இஃதேதுணிவென்றெம்மையுமாண்ட *
அருட்டேசிகனுமறைந்தனனன்றே *
நானொனவேஞானநற்குருவை *
வினவிடிவித்தகைவிளங்கியபிரமம் *
நீயேயென்றுநிச்சயமாகத் *
தத்துவமசிகொடுசாற்றினனன்றே *
இவ்வுரைப்படியேயிருந்தநுபவத்தில்
காட்டுமேகனுனக்குக்கருத்தசையா *

நன்றாய்நோக்காய் நன்னெஞ்சகமே *
அரனன்றன் சேயடாதார்சேரி *
சேர்ந்தவரினம்போற்றிரிந்திடுமவனை *
அறிந்தவனொருவனவ்விடத்தேகி *
அன்னோனிடத்திலரசவிலக்கணம் *
காட்டியுணர்த்துங்கணக்கதுபோல *
நீசீவன்போனிற்குமுன்கண்ணே *
சிவத்தின்குறியைச்செப்பிடக்கேளாய்
சாக்கிரமதனிற்றுக்கிடும்பொருளில் *
நினைவெழுமுனமேநின்றிடுநிலையே *
நின்மலநிலையந்நிலையினிநோக்கின் *
விளங்கிடுஞேயம்விளக்கிடுஞானம் *
நோக்கிடுஞாதுருவவனுமிம்மூன்றும்
நாமேயாகவன்றாய்விளங்கும் *
அவ்விடத்தறிந்ததமலசத்தியினால் *
அபினப்பாவமாயேகமுமாம் *
அந்நிலைநின்றேயசைவுசெய்நினைவில் *
அடைந்திடுமிடத்திலவகைப்பொருளும்
முன்பின்னன்றிமுழுதுநிகழும் *
இஃதுணர்ந்திடுதவிரும்பின்னையினில் *
அசைவுசெய்நினைவிலடைந்தவக்கணமே
சுவாசமங்கிசமெனத்தோன்றிடும்வாக்கு
நான்றெனவேவநவிற்றிடாநிற்கும் *
இவையேசுருதியெழிலாகமமாம் *



நிலையினிலொன்றாய்நினைவினிலைந்தாய்
விளங்குநம்மிடத்தின்மேவுசத்திகளால்
இத்தகையன்றேயிருந்திடநிகழும் *
இதனாலுமேயிருஞ்சிவமாகும் *
இவ்வநுபவத்தையிலக்கிடநீயும் *
கண்டிடனிருந்துங்கலக்கமதற்றுக் *
கண்டிடும்பொருளைக்கருதிவேறாகச் *
சீவனைப்போலத்தியங்கினையினிநீ *
நின்றநிலையேநிலையெனநிற்கில் *
கண்டிடைம்பொருளுஞ்சடமாயுநாமாக
நினைவொடுநிலையேநிலையெனநிற்கில் *
விளம்புமைம்பொருளும்வேறாய்விளங்கும்
நின்றமுன்னிலைக்குநினைவொடுநிலைக்கும்
நாமேயிடமெனநம்மையேயன்றி *
விளங்காதென்றும்விளங்கிடுமுன்னிலை
சற்சத்தியென்றுஞ்சாற்றியபின்னிலை *
அசற்சத்தியென்றமலவயின்முற்சத்தி
சுயசத்தியென்றுஞ்சொல்லுபிற்சத்தி *
கற்பிதமென்றுங்கருதியுணர்ந்தே *
அனைத்துநாமெனவேயறிந்தறிவே
இடைவிடாதிவ்வுடலிருந்திடுப் *
வனாயுநிற்றிடில்வாய்க்குநம்வீடே *

பிரமானுபவ அகவல் - முற்றும்.

---

பதினாறாவது.

# சிவசமரசவாத அகவல்.

கலிவலியினது கலக்கமோர்காலும்
சித்தமாயில்லாத் திருமுதுகிரிவாழ்
என்னையும்பொருளாவெண்ணியாண்டருளும்
விருத்தவம்பிகையேவினையனேற்கொன்
றையமிவ்வையமனையேநின்னால்
அன்றிமற்றொருவராரினு நீங்கா
திவ்வையந்தனையானின்றகற்றத்
துணிவிதுவென்னுஞ்சுருதியின்முடிவின்
அருளியபடியேயருள்செயவேண்டும்
எதெனிற்சொல்கேனெழில்வேதாகமத்
துயிர்பரமேகமோரிரண்டெனவே
ஓதியவவையிரும்பர்கண்முனிவர்
ஆரியர்தந்தமகமிஞ்சக்கொண்ட
படியினிற்சென்றுபரமடைந்தனர்கள்
அவையிலொன்றையலநெறியென்றே
தள்ளுதல்கூடாச்சமரசமாகத்
திரிவையமறச்சிவையேயுணர்ந்தின்
அநுபவப்படியேயநுக்கிரகஞ்செய



வேண்டிடுமோர்நெறிமேவியேமுயலும்
சாதகர்தமக்குச்சமரசவாதம்
அருளில்விளங்காதனுட்டித்தீரில்
நிகழ்முத்திதானானவர்கட்
கருளில்விளங்குமருளாலுனக்குத்
திருவடிசூட்டித்திரிவுசெய்யிருளைத்
தீர்வகற்றிச்சிவமதினாமே
வைத்தபரிசேவகுத்துணையென்னில்
உரைக்கேனியானுமுன்னருளதனில்
இதுவதுவென்னுமியல்புகளில்லாச்
சச்சிதானந்தத்தற்சொரூபத்தில்
பேதவபேதம்பேசுதலின்றி
அநிர்வசனமதாயதுவுளபோதே
கயிற்றினிலரவுகற்பிதம்போல
நினைவுருபமதாய்த்திகழ்ந்திடும்பின்னை
அஃதினில்விளங்குமறைமுப்பொருளும்
எத்தகையென்னிலியம்பியநினைவும்
சுட்டியேநிற்குஞ்சுட்டிக்கண்டிடில்
செகமதுவாகுஞ்செப்பியவகைகளைக்
காணுதலுயிராங்காணவிளக்கல்
பரமதுவாகும்பற்றியசகத்தில்
செகமதுமாயைசெகத்தினைநோக்கப்
பண்ணலஞ்ஞானம்பார்த்திடுமிடத்தில்
அதுவிதுவெனலாலருள்வினையிவ்வகை

நினைவிநின்றும்மலநிகழ்பரமுயிரொன்
றைவகைப்பொருளுமறுதியேநிகழுஞ்
சொரூபமுள்ளளவுஞ்சொற்றிடும்பின்னை
கற்பிதவடிவாய்க்கலந்துடனிற்கும்
நினைவதுவில்லாநிசசொரூபத்தைக்
குறித்திவைகற்பிதங்குறியாவிடத்தில்
கற்பிதமாகவைந்துநிகழும்
நினைவில்சொரூபநிகழ்வேதாந்தம்
நினைவொடுசொரூபநிகழாகமாந்தம்
அதனுளிரண்டுமறுதியதாகும்
நிஜசொரூபத்துநிகழ்பந்தமுத்தி
ஒருகாலமுமிலுளநினைவதனின்
பந்தமுத்திபகர்ந்திடலாகும்
நினைவினுண்டாய்நிகழ்ந்திடுமியானும்
மறதியினுயிர்போன்மயங்கியுமன்று
நின்னருள்தனிலியதிசெய்தனைத்தும்
நீயுமியானுநினைவினிலுயிருடன்
போலவேநின்றும்போக்கியவிடத்தில்
ஒன்றாய்க்கண்டேனுறுதியதாக
இரண்டென்றவர்க்குமிரண்டதாய்நிற்கும்
ஒன்றென்றவர்க்குமொன்றதாய்நிற்கும்
இத்தகைகண்டேனெழின்முத்தியதை
இறையொன்றினையுறுதியாய்க்கொண்டே
ஒன்றினைத்தள்ளவொருத்தனாலுங்கூடா



நினைவில்சொரூபநிகழ்ந்திடுமிரண்டாய்
இஃதினிலைமையெள்ளளவானும்
இன்றியறிந்தேனிவ்வனுபூதி
திரிவோதுணிவோசெப்பிடவேண்டும்
வாராய்புதல்வாமாசறநீயும்
சமரசவாதஞ்சாற்றியபடியே
என்னனுபவமுமெழின்மறைமுடிவும்
இதுதிரிவல்லவெழிற்றுணிவேயாம்
நமதருளாலேநன்றாயறிந்தாய்
இதினீவாழ்வாயென்றிறைவாழ்த்தி
இதுபிரமாணமெனவென்றனக்கும்
உறுதியாய்நீயேயுரைக்கிலுன்னருளில்
திரிவையமறத்தேர்ந்து
சமயிகளுடனேதர்க்கித்தலற்றேன்

சிவசமரசவாத அகவல்—முற்றும்.

திருச்சிற்றம்பலம்.



# விளம்பரம்.

செள்ளிய-ஞூ-மார்கழி-மீ-தத்தில்-பதிக்கப்ப ட்டிருந்த முதல்சாத்திரப்புத்தகத்தில், ஒவ்வொரு சாத்திரமாக பதிப்பித்து வருகின்றதாய் விளம் பரஞ்செய்தபடியே சிலவாதீனப்புத்தகங்களைக்கொ ண்டு பரிசோதித்து இப்போது பதினாறு-சாத்திரங் களையும், ஒரேபுத்தகமாக அச்சியற்றிய படியால்

வேண்டியவர்கள், சென்னப்பட்டணம் பெத்தநாயகன் பேட்டையில்-ஸ்ரீ-அருணாசல ஈஸ் வரன் கோயிலுக்கடுத்த - பள்ளியப்பன் வீதியில்- (யிசு) வது-நம்பருடையவீட்டிலிருக்கும்-மண்ணி ப்பாக்கம். சபாபதிமுதலியாரிடத்தில்-௰௬-சாத்தி ரமும் ஒழிவிலொடுக்கமும்- விலைசுளுவில்வாங்கிக் கொள்ளலாம்

இனிமேல்பதிப்பிக்கப்பட் டபுத்தகங்கள்-பிரபோ தசந்திரோதயமும், மகாவாக்கியம் உரையுடனும், அத்வைதானுபவமும்இம்மூன்றும்சிலதினத்தில்கண் ணோட்டமிடும்படியாயிருக்கலாம்.